எப்போதும் தயார்தான் அவனது க்ளாக்ஸோ ஆகாரத்திற்கு...... பரிசுத்தமான பால் உணவு......மாந்தமும் சோகையும் வராமல் தடுக்க வைடமின் D-யும் இரும்புசத்தும் அளந்து கணக்காகக் கலந்தது. கை படாமல் தயாரிக்கப் பட்டது க்ளாக்ஸோ.



**கிளாக்ஸோ**
**குழந்தை ஆகாரம்**



ஸ்பூன் ஸ்பூனாக பாரக்ஸ் சாப்பிட ஆரம்பிக்கவும்...

மூன்று அல்லது 6 மாதங்களில் இட உணவு கொடுக்க ஆரம்பிக்கும்போதும், சீரணமாகவும், ஏற்றதாகவும் ஜீரணமாகக் கூடியதாகவும் இருக்க வேண்டும். வளர்ச்சிக்கு வலுப்பமானதும் சுகமானதுமான பாரக்ஸைவிட நல்லதும் வெற்றிகரமானதுமான உணவு வேறில்லை. பாரக்ஸைக் காய்ச்ச வேண்டியதில்லை — சூடான பாலையும் சர்க்கரையையும் சாதாரணமாக கலந்தால் போதும்.

இந்தியாவில் ஞாக்ஸோ பொருள்களுக்கு கட்டுறவாளர்கள் :
**ஏ. ஜே. பாஸ்டர் & கம்பெனி லிட்., பம்பாய், கல்கத்தா, மதராஸ்**





# நாளுக்கு நாள் அதிக அழகு...



ரெக்ஸோனுவிலிருக்கும் கேடில் உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியத்துடன் புது தூய்மையும், புது எழிலும் தரும்.

இரண்டு முறையாவது தினமும் ரெக்ஸோனு உபயோகியுங்கள். அதன் கேடில் அடங்கிய நுரையை மெதுவாக சருமத்தில் தேய்த்து பிறகு கழுவுங்கள். ரெக்ஸோனுவிலுள்ள கேடில் உங்கள் சருமத்தை சுத்தம் செய்து, மழமழப்பாக்கி, அழுத்தமளிக்கிறது. மேலும் புது ஆரோக்கியமும், புது மலர்ச்சியும், நீடித்து நிற்கும் அழகும் தரும்.

# ரெக்ஸோனு

கேடில் கலந்த சோப் இது ஒன்றே




R.P. 51-172 TM




ஒரு வாரத்திற்கு நாவிதனுக்கு 6 அணா வரையில் செலவு செய்த போதிலும், பல மனிதர்கள் அடிக்கடி இவ்விதத் தோற்றத்தையே அளிக்கிறார்கள். இந்தத்தொகையில் அவர்கள் மூன்று க்ஷவரங்களைப் பெறுகிறார்கள்; ஆகையால், ஏழு நாட்களில் நான்கு நாட்கள் அவர்கள் கட்டைமயிருடன் இருக்கிறார்கள்.




தினசரி நீங்கள் 7 ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்து கொள்ளுகிறீர்களானால், நீங்கள் இத்தகைய கவர்ச்சியுள்ள தோற்றத்தை அளிப்பீர்கள். தவிரவும், ஒரு ஆறு அணா பாக்கெட் பல வாரங்கள் உபயோகத்தில் வருவதால், பணத்தையும் மிச்சப் படுத்துவீர்கள்.

"7 ஓ'க்ளாக்" பிளேடுகள் உயர்ந்த எஃகினால் மும்முறை சாணை தீட்டப்பெற்றவை. மார்க்கெட்டில் அவைகள்தான் மிகவும் கூருள்ளவை. நம்பிக்கைக்குப் பாத்திரமானவை.

**தினந்தோறும் 7 ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.**







குறைந்த செலவில் அதிக க்ஷவரங்களை அளிக்கும் பிளேடுகள்.

**5 பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டுக்கு அணா 7**

# ஸைலண்ட்!






## Projector G

16 mm. or 8 mm.

### பைலார்டு G ஸைலண்ட் ப்ரொஜெக்டரின் ஆதார அமைப்புகளை ஆராய்ந்து பாருங்கள்

- பக்குவமான இயந்திர சாதனங்களால் பிலிமின் தேய்மானம் குறைவு.
- கலைந்து போகாமல் ஒரே நிதானமாகப் படமெடுக்கும்.
- படம் எடுக்கும் போது வெகு நிசப்தம். எல்லா காண்டிஷனிலும், வோல்டேஜுகளிலும் வேலை செய்யும்.
- நீடித்து உழைக்கக்கூடியது விலையும் குறைச்சல்.
- முன் பக்கமும் பின் பக்கமும் படங்கள் காட்டலாம்.
- நிஸ்சலன படங்களையும் திரையிடலாம். பிலிமை திருப்பி சுற்றும் மோட்டார்.
- 16 mm. 8 mm. & 9½ mm. மூன்று அளவுகளுக்கும் பாகங்களை மாற்றிக் கொள்ளலாம்.
- மாற்றக்கூடிய லென்ஸுகள் மிகவும் அழகிய கேஸில் அடங்கியது.

இந்தியாவிற்கு
பூரண டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

**Allied Photographics Limited**

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்



# கல்கி பொருளடக்கம்



மலர் 8 இதழ் 47 | ஜூன் 19 | விரோதி ஆனி 6உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

ஆரணியில் எங்கள் சொந்தத் தறியில் தயார் செய்த

## கொள்ளேகாலம் பட்டுப் புடவைகள்

ரம்யமான கலர்கள்
அழகான பார்டர்கள்
நூதன ரகங்கள்
குறைந்த விலைகள்

மற்றும் பல ஊர் நூல் சேலைகள், பட்டு, ஜரிகை துப்பட்டாக்கள், வேஷ்டிகள் கிடைக்கும் நம்பிக்கையான இடம்

ஒரு முறை விஜயம் செய்து உங்களுக்குத் தேவையானதைத் தேர்ந்தெடுங்கள்.

●

## ரத்தன் ஸில்க் ஹவுஸ்

32, ராயப்பேட்டை ஹைரோட்
(டிராம்ஷெட் சமீபம்)
சென்னை 14
டெலிபோன்: 86544

## நோயுற்ற குழந்தைகளுக்குப் பல வருடங்களாக சேவை புரிந்து வருகிறது



ஜம்பியின் லிவர்க்யூர் பல்லாண்டுகளாக செய்து வரும் சேவையால் ஆயிரக் கணக்கான விலையற்ற சிற்றுயிர்கள் ஈரல் குலைக்கட்டி வியாதிகளிலிருந்து காப்பாற்றி மனித சமூகத்திற்கு விசேஷ நன்மை புரிந்து வருகிறது.

டாக்டர்கள் இவ் வியாதியை போக்க ஆரம்ப நிலை, கட்டி முதிர்ந்த நிலைக்கு தகுந்தவாறு 'சிம்பிள்' அல்லது 'காம்ப்ளிகேட்டட்' லிவர்க்யூர் மருந்துகளை சிபார்சு செய்து இவ் வியாதியை குணப் படுத்துகிறார்கள்.

ஜம்பியின் சிம்பிள் லிவர்க்யூர் சிறிய அளவில் கொடுத்து வர, வியாதி வராமல் தடுக்கவும், பசி, ஜீரண சக்தி விருத்தி செய்யவும் மலச்சிக்கல்களைப் போக்கி ஈரல், குலைகளை சரியானபடி வேலை செய்கிறது.

முன்னால் ஈரல் குலைக் கட்டி நோயினால் பிடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் திரும்பவும் கர்ப்பம் தரிக்கும் பொழுது ஜம்பியின் டானிக்கை உபயோகப் படுத்துவது நல்லது. பிறக்கப் போகும் குழந்தையின் ஈரல், குலைகள் தாய் மூலமாய் ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை அனுசரித்து இந்த டானிக் தயாரிக்கப் பட்டுள்ளது.



**ஜம்பியின்**
**லிவர்க்யூர்**

ஜம்பி வெங்கடரமணய்யா அண்ட் ஸன்ஸ்
மைலாப்பூர் மதராஸ் 4 (போன் நெ. 8130)
[illegible] பம்பாய் 4. (போன் நெ. [illegible])
மற்றும்: டெல்லி, கல்கத்தா.

J. 234




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 47

# என்ன செய்தி?

## நன்றி செலுத்துங்கள்

தேசபக்தர் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையின் பெயரால் கப்பல் விட்டதோடு தூத்துக்குடி அன்பர்கள் திருப்தியடைந்து விடவில்லை. கல்விக் கடலைக் கடக்க, வ. உ. சி. பெயரால் ஒரு கல்லூரியும் ஏற்படுத்தப் போகிறார்கள். இந்தக் கல்லூரிக்குச் சென்ற வாரத்தில் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா அஸ்திவாரக் கல் நாட்டினார்.

மேற்படி கல்லூரியை நிர்மாணிப்பதற்காகச் சென்னை சர்க்கார் அறுபது ஏக்கர் நிலம் இனாமாகக் கொடுத்து உதவியிருக்கிறார்கள். திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ அம்பலவாண பண்டார சந்நிதிகள் கல்லூரிக் கட்டிடத்துக்காக ஐம்பதாயிரம் ரூபாய் நன்கொடை அளிப்பதாய் வாக்களித்திருக்கிறார்கள். வ. உ. சி. கல்லூரிக்கு மொத்தம் ஐந்து லட்சம் ரூபாய் மூலதனம் வேண்டியிருப்பதாக ஸ்ரீ மு. சி. வீரபாகுப் பிள்ளை கேட்டுக் கொண்டிருக்கிறார். தமிழ் மகாஜனங்கள் தாராளமாகப் பொருளுதவி புரிந்து, ஸ்ரீ வ. உ. சி. யின் தொண்டுக்கு நன்றி செலுத்துவார்களாக.

## பொருளாதார அளவுகோல்

இன்று உலக நாடுகளிடையே இந்தியாவின் மதிப்பு மிகவும் உயர்ந்திருப்பதற்குக் காரணம் என்ன? இந்தியாவின் பணப் பெருக்கமா அல்லது படைவலிமையா? இரண்டுமில்லை; இந்தியத் தலைவர்களின் இணையற்ற பெருமையும் சீலமும் சத்திய நெறியும் அறிவுத் திறனும் தான். அரசியல் துறையில் நமது தேசத்தின் கௌரவம் உச்ச நிலையில் இருப்பதால்தான், உலக மேடையில் இந்தியா வல்லரசுகளுக்குச் சமமாக விளங்குகிறது.

அரசியல் துறையில் அவ்வளவு செல்வாக்குடன் விளங்கும் பாரத நாடு பொருளாதாரத் துறையில், வர்த்தகத் துறையில் எந்த ஸ்தானத்தை வகிக்கிறது என்பதைக் கவனிப்போர் வருந்தாமல் இருக்க முடியாது. ஒரு தேசத்தின் பொருளாதார நிலையை அளக்கும் கருவி ஒன்று உண்டு என்றால், அது அத் தேசத்தின் ஏற்றுமதி வர்த்தகம்தான். சென்ற மகா யுத்தத்துக்கு முன் ஜப்பானின் ஏற்றுமதி வியாபாரம்தான் அதை மிகவும் வல்லமை வாய்ந்த வல்லரசுகளில் ஒன்றாக விளங்கச் செய்தது. அதுபோலவே, இந்தியாவிலிருந்து பிற நாடுகளுக்கு ஏராளமான சாமான்கள் ஏற்றுமதியானாலன்றி, இந்தியாவின் பொருளாதார நிலை சீர்ப்பட முடியாது; நாட்டின் முன்னேற்றத்துக்கு அவசியமான இயந்திரங்களைப் பிற நாடுகளிலிருந்து தருவிக்கவும் முடியாது.

## கௌரவத்தைக் குலைக்காதீர்

இவ்விஷயமாக இந்திய சர்க்கார் வர்த்தக மந்திரி கே. ஸி. நியோகி சமீபத்தில் பேசியபோது, இந்தியா வெட்கித் தலை குனியும்படியான ஓர் உண்மையை வெளியிட்டார். இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சாமான்கள் கலப்படமாக இருக்கின்றன என்று பல வெளிநாடுகளிலிருந்தும் புகார்கள் வந்திருக்கின்றன என்றார். இங்கிருந்து அனுப்பப்படும் சரக்குகளில் புழு பூச்சிகள், குப்பை செத்தைகள், கற்கள் மண் எல்லாம் கலந்திருக்கின்றன என்பதே வெளி நாடுகளின் புகார். வேர்க்கடலையில் கூழாங்கல்லைச் சேர்க்கிறார்கள்; ஆமணக்கு எண்ணெயில் தண்ணீரைச் சேர்க்கிறார்கள்; ஜவுளி முதலிய சாமான்களில் உயர்ந்த ரகத்தை மாதிரிக்குக் காட்டி விட்டு மட்ட ரகத்தை அனுப்புகிறார்கள்.

அரசியல் துறையில் இரவு பகலாக உழைத்து இந்தியாவின் கௌரவத்தை நமது தலைவர்கள் உயர்த்தி வருகையில், மற்றொரு புறம் இந்தியாவின் பொருளாதார பலத்தைச் சீர்குலைத்து, இந்தியாவை உலகத்தின் முன்னிலையில் இழிவுபடுத்தும் ஏற்றுமதி வர்த்தகர்களின் நாணயமற்ற நடத்தையை என்னவென்று சொல்வது?

# மாஸ்கோ விஜயம்


வரவேற்பு
"நவாப் லியாகத் அலிகான் தோழர்: ஸ்டாலின் அவர்களால் மாஸ்கோவுக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்"—செய்தி
அலி-கும்-சலாம்! ஆதாப் அரஸ்! வருக! வருக!


சிரம பரிகாரம்
பாகிஸ்தான் பிரதமரின் சரீரம் குளிர ஸ்டாலின் விசிறுகிறார்: அவருடைய செவிகள் குளிர மாலடாவும் விஷின்ஸ்கியும் ரஷ்ய வாத்திய சங்கீதம் பொழிகின்றனர்.


விருந்து
என்ன ருசி! என்ன ருசி!
கனம் பொருந்திய உங்களுக்கென்று பிரத்தியேகமாக போலார் வெள்ளைக் கரடியைக் கொன்று தயார் செய்தது!

· சாஸ்திரி


அறிமுகம்
மாஸ்கோ தோழர்களே! இதோ காஷ்மீரை விடுதலை செய்த வீரர்! ஜுனகாத் – ஹைதராபாத் சமஸ்தானங்களின் சுதந்திரத்துக் காகப் பாடுபட்ட தோழர்! இன்னும்...


...பிரிட்டிஷ் சிங்கத்தை நேருக்கு நேர் பார்த்து "நான் களிமண் அல்ல" என்று தைரியமாகக் கூறிய தீரர் இந்த மகா புருஷர் இவர்தான்!


கோரிக்கை
நவாப் சாகிப்! ஐ.நா. சபையில் அடிக்கடி சண்டப்பிரசண்டம் செய்யும் இந்த அதிசய பெருங்குணவாளரை எங்களுக்குத் தந்து உதவுவீர்களா? இவருடைய உதவி மட்டும் இருந்தால் அணுகுண்டு கூட எங்களுக்குத் தேவையாயிராது!

# புகாருக்குப் பதில் வேண்டும்!

சென்னை மந்திரிகளின் மீது சில புகார்கள் காங்கிரஸ் மேலிடத்துக்குப் போயிருப்பதாகக் கேள்விப் பட்டோம். அதைப்பற்றி விசாரணை நடக்குமா, நடக்காதா என்ற பிரச்னை சில காலம் அடிபட்டுக் கொண்டிருந்தது. புகார் கிளம்பி ஒரு வருஷத்துக்கு மேலே ஆன பிறகு ஏதோ ஒருவிதமான விசாரணை நடக்கும் என்று தெரிந்தது. காங்கிரஸ் பொதுக் காரியதரிசிகள் இருவரில் ஒருவரான ஸ்ரீ சங்கரராவ்தவே மேற்படி விசாரணைக்காகச் சென்னைக்கு விஜயம் செய்திருக்கிறார். விசாரணை விவரமும் அதன் முடிவும் காலா காலத்தில் வெளியாகும் என்று எதிர்பார்க்கிறோம்.

ஸ்ரீ சங்கர ராவ் தவே சென்னைக்கு விஜயம் செய்ததற்கு முதல் நாள் ராஷ்டிரபதி டாக்டர் பட்டாபி சீதாராமய்யா சென்னைக்கு விஜயம் செய்தார். அவரிடம் சிலர் "காங்கிரஸ் மந்திரிகள் மேல் ஏதோ புகார்களாமே? அதற்காக விசாரணையாமே?" என்று கேட்டார்கள். அதற்கு ராஷ்டிரபதி பட்டாபி சீதாராமய்யா "மந்திரிகள்மேல் வந்திருக்கும் புகார்கள் எல்லாம் ரொம்பவும் மிகைப்படுத்தப் பட்டவை. இப்போது இந்தியாவுக்கு ஜனநாயகம் வந்திருக்கிறது. ஏதோ சிற்சில குற்றங் குறைகள் இருக்கக் கூடும். அவற்றை நாம் மிகைப்படுத்தி விளம்பரப்படுத்திக் கொண்டிருக்கலாமா? இதிலெல்லாம் கொஞ்சம் நிதான புத்தி வேண்டும்" என்று பதில் கூறியதாகப் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது.

ராஷ்டிரபதியின் அபிப்பிராயத்தை நாம் பூரணமாக ஆதரிக்கிறோம். நம்முடைய மந்திரிகளிடத்திலும் தலைவர்களிடத்திலும் சிற்சில குறைபாடுகள் இருப்பதாகத் தோன்றிய போதிலும் அவற்றை மிகைப்படுத்திப் பிரமாதமான புகார்களாகச் செய்து கொண்டிருக்கக் கூடாது. அப்படிச் செய்து கொண்டிருந்தால் ஜனநாயகத்தின்பாடு ஆபத்தாக முடியும். நம்முடைய தலைவர்களிடமும் நம்முடைய சொந்த சர்க்காரை நடத்தும் மந்திரிகளிடமும் நமக்கு நம்பிக்கை வேண்டும். "எல்லாம் அயோக்யத்தனமாகத்தான் நடக்கும்" என்ற அஸ்திவாரத்தின் பேரில் நமது அபிப்பிராயங்களை ஸ்திரப்படுத்திக் கொள்ளக் கூடாது. அப்படிச் செய்வது ஜனநாயகத்தைக் கொலை செய்து தேசத்துக்கும் துரோகம் செய்வதாகும். இத்தகைய மனோநிலை மக்கள் எல்லாருக்கும் பரவிவிட்டால் இந்தியாவின் சுதந்திரத்தை நாம் ஒரு நாளும் காப்பாற்றிக்கொள்ள முடியாது.

நம்முடைய மனநிலையின் அஸ்திவாரம் பரஸ்பர நம்பிக்கையாக இருக்குமானால், பிறகு வெறும் புகார்களை நம்பமாட்டோம்; சிறு குறைகளைப் பெரிதாகக் கருத மாட்டோம்; ஒருவரை யொருவர் தூஷித்துக் கொண்டும் துவேஷித்துக் கொண்டும் நாட்டைப் பாழாக்க மாட்டோம்.

நாம் நடந்து கொள்ள வேண்டியது பற்றி இவ்வளவையும் ஒப்புக் கொண்ட பிறகு நமது தலைவர்களும் மந்திரிமார்களும் நடந்து கொள்ள வேண்டியதைப் பற்றியும் கொஞ்சம் சொல்லவேண்டி வருகிறது. ஜனநாயகத்தைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பும் இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பும் நம்மைவிட அவர்களுக்கு அதிகம் உண்டு.

ஒரு மாகாணத்தை ஆளும் பொறுப்பு வாய்ந்த மந்திரிகள் கூடிய வரையில் புகார்களுக்கு இடங் கொடாதபடி நடந்து கொள்ள வேண்டும். மந்திரி பதவியை உபயோகித்துத் தங்கள் சொந்தக் காரியங்களைப் பார்த்துக் கொண்டார்கள் என்றாவது தங்கள் உற்றார் உறவினர்களுக்கு விசேஷ சௌகரியங்களைச் செய்து கொடுத்தார்கள் என்றாவது புகார் கிளம்புவதற்கு இடந் தரக்கூடாது.

மந்திரிகள் எவ்வளவு ஜாக்கிரதையாக நடந்து கொண்டாலும் சிலர் பொய்யான புகார்களைக் கிளப்பி விடலாம். அப்படிப்பட்ட புகார்களின் விஷயத்தில் பொது ஜனங்களுக்கு உண்மையை விளக்கிச் சொல்ல வேண்டும்.

தலைவர்கள் அல்லது மந்திரிகளின் சொந்த வாழ்க்கையைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாகக் கட்டி விடப்

படும் ஆபாசப் புகார்கள் விஷயத்தில் தலைவர்களும் மந்திரிகளும் சிறிதும் கவனம் செலுத்த வேண்டியதில்லை; அவற்றைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. அத்தகைய ஆபாசப் புகார்களை அறிவு படைத்த பொது மக்கள் நம்ப மாட்டார்கள். அத்தகைய புகார்களைச் சொல்லுகிறவர்களைத்தான் ஜனங்கள் வெறுத்து ஒதுக்குவார்கள்.

ஆனால் எல்லாப் புகார்களையுமே மந்திரிகள் அவ்விதம் கவனியாமல் அலட்சியம் செய்துவிடக் கூடாது. பொது நிர்வாகத்தில் மந்திரிகள் முறைதவறாக நடந்துகொண்டார்கள் என்ற புகார் ஏற்பட்டால் அதற்குத் தக்க சமாதானம் சொல்லவேண்டும்; சமாதானம் சொல்ல முடியாவிட்டால் பதவியை ராஜீனமா செய்வதுதான் வழி. ஜனநாயகத்துக்குத் தாயகமான பிரிட்டனில் மந்திரிகள் இந்த முறையைத்தான் கடைப்பிடிக்கிறார்கள். ஒரு அற்பமான ஊழலுக்கு இடங்கொடுத்ததாக ஏற்பட்டு விட்டாலும் பதவியை ராஜீனமா செய்து விடுகிறார்கள்.

நம்முடைய மத்திய இந்திய அரசாங்கத்தில் எல்லாரும் போற்றும்படி நிதி நிர்வாகம் செய்துவந்த திரு ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் பிரிட்டிஷ் மந்திரிகளின் வழியைக் கையாண்டு பதவியை ராஜீனமா செய்தது அனைவரும் அறிந்ததே.

எனவே, நாட்டில் ஜனநாயகம் தழைக்க வேண்டுமானால் பொது ஜனங்கள், மந்திரிகள் ஆகிய இரு சாராரும் தங்கள் பொறுப்பை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும். மந்திரிகளின்மீது அநாவசியமான புகார்களைப் பொது ஜனங்கள் சொல்லக் கூடாது; நம்பக் கூடாது; சின்ன விஷயங்களை அதிகப்படுத்திச் சொல்லவும் கூடாது.

மந்திரிகள் பொது நிர்வாகத்தில் புகார்கள் ஏற்படும்படி நடந்து கொள்ளக் கூடாது; பொய்யான புகார்கள் ஏற்பட்டால் அவற்றை மறுதளித்து உண்மையை விளக்கவேண்டும்.

* * *

சென்னை மந்திரிமார்கள்மீது பலர் பலவிதமான குறைகள் கூறியிருக்கிறார்கள். அவை பெரும்பாலும் ஆதாரமற்றவை யென்றும் மிகைப்படுத்தியவை யென்றும் நாம் கருதுகிறோம்.

ஆனால் "ஸ்வதந்திரா" பத்திரிகை கனம் கோபால ரெட்டி மீது சொல்லியிருக்கும் புகாரை அம்மாதிரி நாம் அலட்சியம் செய்வதற்கில்லை.

அது சின்ன விஷயமல்ல; கனம் கோபால ரெட்டியின் சொந்த வாழ்க்கை பற்றிய புகார் அல்ல; பொது மக்களின் பணத்தில் பத்து லட்சம் ரூபாய் சம்பந்தப்பட்ட காரியம்.

ஆகையால் அதைப் பொதுஜனங்கள் அலட்சியம் செய்ய முடியாது; மந்திரிமார்களும் அலட்சியம் செய்யக்கூடாது.

"ஸ்வதந்திரா"வில் வந்த புகாரைப் பற்றி நேயர்கள் பலருக்குத் தெரிந்திருக்கலாம். இங்கே சுருக்கமாகத் தெரியப் படுத்துகிறோம்.

"சுதர்சன் லிமிடெட்" என்று ஒரு கம்பெனி இருக்கிறது. அதில் கனம் கோபால ரெட்டி தாம் மந்திரியாகும் வரையில் டைரக்டராக இருந்தார். மந்திரி பதவிக்கு வந்ததும் தம் மனைவியின்பேரில் பங்குகளை மாற்றிவிட்டார். அந்தக் கம்பெனி டைரக்டர்கள் ஒன்பது பேரில் கனம் கோபால ரெட்டியின் சகோதரரும் மைத்துனரும் இரண்டு ஷட்டகர்களும் இன்னும் சில உறவினரும் இருக்கிறார்கள். இந்தக் கம்பெனியார் நிலக்கடலை எண்ணெய் தயாரிக்கும் மில் வைக்கப் போகிறார்கள். இதற்காக இயந்திரங்களுக்கு ஆர்டர் செய்திருக்கிறார்கள். இயந்திரங்கள் இன்னும் வந்து சேரவில்லை. வேலை ஆரம்பிக்கவும் இல்லை. இந்தக் கம்பெனிக்குச் சென்னை சர்க்கார் கைத்தொழில்களுக்குக் கடன் கொடுக்கும் திட்டத்தின் படி பத்து லட்சம் ரூபாய் சொற்ப வட்டிக்குக் கடனாகக் கொடுத்திருக்கிறார்கள். கடன் சென்ற 1948-ல் சாங்ஷன் செய்யப்பட்டது. இந்தக் கம்பெனியின் பங்குதாரர்கள் கூட்டம் சமீபத்தில் கனம் கோபால ரெட்டியின் இல்லத்தில் நடந்தது.

மேலே கூறியவைதான் விவரங்கள். இந்த விவரங்களை வைத்துக்கொண்டு "ஸ்வதந்திரா" ஆசிரியர் ஸ்ரீ காஸா சுப்பராவ் கனம் கோபால ரெட்டிமீது குற்றம் சுமத்தியிருக்கிறார். கனம் நிதி மந்திரி தமது செல்வாக்கைப் பயன்படுத்தி இன்னும் தொழிலே ஆரம்பிக்காத ஒரு கம்பெனிக்குப் பத்து லட்சம் ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்ததாகப் புகார் சொல்கிறார். அந்தக் கம்பெனி டைரக்டர்கள் 100க்கு 12 விதம் வட்டி வாங்கி லேவாதேவி செய்கிறவர்கள் என்று சுட்டிக் காட்டுகிறார்.

"ஸ்வதந்திரா" ஆசிரியர் ஸ்ரீ காஸா சுப்பராவ் தென்னாட்டின் திறமை வாய்ந்த பத்திரிகாசிரியர்களில் ஒருவர். சென்னை சர்க்கார் அமைத்துள்ள

பத்திரிகை ஆலோசனைக் கமிட்டியில் காஸா சுப்பராவ் ஒரு அங்கத்தினர்.

எனவே, "ஸ்வதந்திரா"வின் குற்றச் சாட்டுக்குச் சரியான பதில் நம்முடைய மந்திரிகள் கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்தோம். ஆனால் நாளது வரையில் மந்திரிகளின் தரப்பில் பதில் ஒன்றும் வரவில்லை.

"காஸா சுப்பராவ் அப்படித்தான் ஏதாவது எழுதுவார்; அதற்கு ஏன் பதில் சொல்ல வேண்டும்?" என்று நம்முடைய மந்திரிமார்கள் கருதினால் அது பெருந் தவறாகும்.

புகாரில் உண்மை இல்லா விட்டால், "பொய்யான புகார்" என்று தெரிவிக்கட்டும். அதனால் எல்லாருமே திருப்தி அடைவார்கள்.

பத்து லட்சம் ரூபாய் கடன் கொடுத்தது உண்மையா யிருந்து, அதில் முறைத் தவறு ஒன்றும் இல்லை என்று சென்னை மந்திரிகள் கருதினால் அதைக் காரண காரியங்களுடன் விளக்கிச் சொல்லட்டும். நூற்றுக்கு ஐம்பது பேராவது திருப்தி அடைவார்கள்.

இவ்வளவு முக்கியமான விஷயத்தில் பதிலே சொல்லாம லிருப்பது முறையல்ல வென்று கருதுகிறோம். ஏனெனில் புகாரில் கண்ட விஷயம் ஒன்றுக்குப் பத்தாக மிகையாகி ஜனங்களிடம் பரவிக் கொண்டுதானிருக்கும். அதனால் காங்கிரஸ் மந்திரிகளின் புகழ் கெடுவதோடு காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நற்பெயருக்கும் மாசு உண்டாகும்.

ஸ்ரீ சங்கரராவ் தவே இந்தப் புகாரைப் பற்றி விசாரிக்கப் போகிறாரா என்பது நமக்குத் தெரியாது. இந்த விஷயத்தில் இரகசிய விசாரணைக்கு அவசியமும் இல்லை. பகிரங்கமாகச் சொல்லப் பட்டிருக்கும் புகாருக்குச் சென்னை சர்க்கார் பகிரங்கமாகப் பதில் தெரிவிப்பதே நல்லது.

மேற்படி புகார் விஷயமாக நம்முடைய கருத்தையும் சொல்லி விடுகிறோம். சுதர்சன் கம்பெனிக்குப் பத்து லட்சம் கடன் கொடுத்ததில் முறைத் தவறு இல்லாமலிருக்கலாம். ஆயினும் பெரிய சர்க்கார் பதவியிலிருப்போர் சின்ன சந்தேகங்களுக்குக்கூட இடங் கொடாமலிருப்பது நலம். ஜனநாயகம் குழந்தைப் பருவத்திலிருக்கும் இந்தியா தேசத்தில் இது மிகவும் அவசியம். ஆகையால் முறைத் தவறில்லாமல் மேற்படி கடனைக் கொடுத்திருந்தால் கூட, பொதுஜன உணர்ச்சியை முன்னிட்டு மேற்படி கம்பெனியார் கடனை உடனே திருப்பிக் கொடுத்து விடும்படி செய்வது உத்தமமா யிருக்கும்.

கடன் தொகை கொடுபடாமல் சர்க்காரால் அனுமதிக்கப் பட்டதோடிருந்தால் சுதர்சன் கம்பெனியார் மேற்படி கடன் தங்களுக்கு வேண்டாம் என்று கூறி மறுதளித்து விடலாம்.

## ......."சிந்தனை" ஆண்டு மலர்......

மக்களைச் சிந்தனை செய்யத் தூண்டுவதற்காக ஒரு பத்திரிகை நடத்துவதென்றால் அது இலகுவான விஷயம் அல்ல. பேராசிரியர் ஸ்ரீ அ. சீனிவாச ராகவன் அவர்கள் நடத்திவரும் "சிந்தனை"ப் பத்திரிகை அத்தகைய அரும்பணியைச் செய்து வருகிறது. சிந்தனையின் ஒவ்வொரு பக்கமும், அதில் வெளியாகும் ஒவ்வொரு விஷயமும், எல்லோருடைய சிந்தனையையும் தூண்டுவதாக அமைந்திருக்கும். சென்ற பதினெட்டு மாதங்களாக இவ்விதம் சிந்தனை சக்தியைத் தமிழ் மக்களுக்கு ஊட்டி வந்த மேற்படி பத்திரிகை இப்போது ஆண்டுமலர் ஒன்றையும் வெளியிட்டிருக்கிறது. இதிலும் வழக்கம் போல் சிந்தனைக்கு விருந்தாக விளங்கும் பல அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. நம்முடைய மதிப்புக்குரிய தலைவரும் இந்தியாவின் கவர்னர் ஜெனரலுமான ராஜாஜி அவர்கள், பாரத நாடு சீக்கிரமாக முன்னேற வேண்டுமானால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்தித்து எழுதியிருக்கும் கட்டுரை வெகு அருமையாக இருக்கிறது. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் புராதன சிலா சாசனங்களைப் பற்றி எழுதியுள்ள கட்டுரையில் தமது அபூர்வமான ஆராய்ச்சித் திறமையைப் புலப்படுத்துகிறார். ஸ்ரீ எஸ். வையாபுரிப்பிள்ளை, ஸ்ரீ கி. சந்திரசேகரன், ஸ்ரீ மீனாட்சி சுந்தரனார், ஸ்ரீ பிச்சமூர்த்தி, 'சிட்டி' முதலிய பிரபல எழுத்தாளர்கள் எழுதியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகளும் கதைகளும் கவிதைகளும் நாடகங்களும் இம்மலரை அலங்கரிக்கின்றன. "எல்லையிலே" என்ற நாடகம் படிக்கும்போதே ரோமாஞ்சலியை உண்டுபண்ணுகிறது. ஆவர்ண மேலட்டை கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. இவ்வளவு அருமையான மலருக்கு விலை ரூ. 1—4—0 தான் என்பதே நம்முடைய சிந்தனையைத் தூண்டக் கூடியதாக இருக்கிறது. இது போன்ற இன்னும் பல "சிந்தனை" மலர்களை அடிக்கடி எதிர்பார்க்கிறோம்.

# ஒரே மருந்து!

எல்லா வியாதிகளுக்கும் ஒரே மருந்து; எல்லா ஆட்சேபணைகளுக்கும் ஒரே பதில்! இதுதான் சென்னை சர்க்கார் நிதி மந்திரி கனம் கோபால ரெட்டியின் சித்தாந்தமாக இருந்து வருகிறது. பஸ் கட்டண உயர்வை ஆட்சேபித்தால், "இஷ்டப்பட்டவர்கள் உயர்ந்த கட்டணத்தைக் கொடுத்து பஸ்ஸில் செல்லட்டும்; இஷ்டமில்லாதவர்கள் நடந்து செல்லட்டுமே" என்கிறார். சினிமாக்களுக்கு விதிக்கப் பட்டிருக்கும் புதிய வரியால் சினிமாக் கட்டணங்கள் உயர்ந்து விடும் என்று கூறினால், "எதற்காக சினிமாவுக்குப் போகிறீர்கள்? போகாமல் இருந்து விடுங்களேன்" என்று 'புத்திமதி' சொல்லுகிறார்.

ஹோட்டல்களில் ஜனங்கள் சாப்பிடும் உணவுக்குக் கனம் கோபால ரெட்டி இப்போது வரி விதிக்கத் துணிந்திருக்கிறார். இந்த வரி, வாழ்க்கைச் செலவு பன்மடங்கு உயர்ந்து வாழ வழி தெரியாமல் தவிக்கும் ஜனங்களின் கஷ்டத்தை இன்னும் அதிகப்படுத்துவதாக இருக்கிறது. அன்றியும் ஒவ்வொரு வேளை சாப்பிடும்போதும் வரி உயர்வை நினைத்துச் சர்க்காரைச் சபித்துக் கொண்டே சாப்பிடச் செய்வதாகவும் இருக்கிறது. மேற்படி வரியை ஆட்சேபித்தால் கனம் நிதி மந்திரி, "வரி கொடுக்க இஷ்டமில்லா விட்டால், சாப்பிடுவதை நிறுத்தி விடுங்கள்!" என்று பதில் கூறி விடுவாரோ, என்னவோ!

பூரண மதுவிலக்குக் காரணமாக சென்னை சர்க்காரின் வருமானத்தில் சுமார் பதினேழு கோடி ரூபாய் குறைந்து விட்டது. மதுவிலக்கு நஷ்டத்தை ஈடு செய்வதற்கென்றே விதிக்கப்பட்ட விற்பனை வரியின் மூலம் பதின்மூன்றரைக் கோடி ரூபாய்க்கு மேல் சர்க்காருக்குக் கிடைத்துவிடுகிறது. பாக்கி மூன்றரைக் கோடி ரூபாய்தான் துண்டு விழுகிறது. சென்னை மாகாணத்தின் ஐம்பது கோடி ரூபாய் வரவு செலவில் இந்த மூன்றரைக்கோடி துண்டு விழுந்து விடுவதினால் குடி முழுகிப் போகாது. அப்படியே ஈடு செய்யத்தான் வேண்டுமானாலும் அதற்காக இப்படிக் கண்ணிலே பட்ட பொருள்கள், கண்ணிலே பட்ட தொழில்கள், கண்ணிலே பட்ட ஸ்தாபனங்கள் எல்லாவற்றுக்கும் வரி விதிக்க வேண்டிய அவசியம் இல்லை. கொப்பரைக்கு வரி, வேர்க்கடலைக்கு வரி, ஓட்டலுக்கு வரி, சாப்பாட்டுக்கு வரி, சினிமாவுக்கு வரி, பத்திரிகைக்கு வரி—என்று இப்படி ஒரே மூச்சில் பற்பல வரிகளை வாரி வீசுவதற்கு அவசியம் என்ன நேர்ந்தது? 'இன்ஸால்வென்ட்' ஆகப்போகும் நிலையிலுள்ளவர்கள் பறந்து விழுந்துகொண்டு அங்குமிங்கும் சுற்றி அலைந்து கண்ணில் பட்டதை யெல்லாம் சுருட்டிக்கொண்டு ஓட முயற்சிப்பதை ஒத்திருக்கிறது கனம் கோபால் ரெட்டியின் வரித் திட்டம்.

ஏற்கெனவே விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரிகளைச் சரிவர அமுல் நடத்துவதன் மூலமும் சர்க்கார் நிர்வாகத்தில் சிக்கன முறைகளைக் கைக்கொள்வதன் மூலமும் மேற்படி மூன்றரைக்கோடி ரூபாயையும் ஈடு செய்துவிட முடியும். சர்க்கார் இலாகாக்களின் நிர்வாகத்தில் சிக்கனம் செய்யக் கூடிய இனங்களை யெல்லாம் செய்துவிட்டதாகச் சொல்ல முடியாது. அடைக்கக் கூடிய பொத்தல்களும் நிறுத்தக்கூடிய செலவுகளும் தள்ளி வைக்கக் கூடிய திட்டங்களும் எவ்வளவோ இருக்கின்றன. அதை யெல்லாம் கவனியாமல் புதிய வரிகளை விதிப்பதன் மூலம் சர்க்கார் புதிய பிரச்னைகளையே சிருஷ்டித்துக் கொள்கிறார்கள். உத்தேசத்திலுள்ள புதிய வரிகளினால் சர்க்காருக்குக் கிடைக்கக்கூடிய வருமானத்தைக் காட்டிலும் ஜனங்களுக்கு ஏற்படும் தொந்தரவு பன்மடங்கு அதிகமாயிருக்கும். சொற்பத் தொகையை ஈடு செய்வதற்காகச் சென்னை சர்க்கார் பொது ஜனங்களுக்குத் தொந்தரவைக் கொடுத்து அவர்களுடைய அதிருப்திக்கு ஆளாகக் கூடாது.

கூடுமான வரையில் சிக்கனம் செய்த பிற்பாடும் பணம் தேவைதான் என்று நிச்சயமாக ஏற்பட்டால் இரண்டொரு பெரிய வருமான இனங்களைக் கண்டுபிடித்து வரி போட்டு வசூலித்துக் கொள்ளவேண்டும். ஏழை எளியவர்களின் தலையிலேயே மேலும் மேலும் கை வைக்கக் கூடாது.

# அணை கட்டுவோம்! ஆற்றைத் தேக்குவோம்!

ரா. கி.

"வீட்டுக்கு ஒரு ஆள் கொடுங்கள்! காணிக்கு ஒரு கலம் நெல் கொடுங்கள்! ராஜராஜ ராஜமார்த்தாண்ட சோழ மகாராஜாவின் கட்டளை!" என்று பறையறைவோர் கூவியதைக் கேட்டபோது சோழ நாட்டு வீரக் குடிமக்கள் வீறு கொண்டு எழுந்தார்கள். "ஏதோ யுத்தம் வரப்போகிறது; மகாராஜா பகைவர்கள் மீது படையெடுத்துச் செல்லப் போகிறார்!" என்று எண்ணித் தோள் பூரித்தார்கள். "நான் போவேன்!" "நான்தான் போவேன்!" என்று ஒவ்வொரு குடும்பத்திலும் போட்டி ஏற்பட்டது. "காணிக்கு ஒரு கலம் என்ன? இரண்டு கலம் கொடுக்கிறோம்; மூன்று கலமும் கொடுக்கிறோம்!" என்று விவசாயிகள் முன்வந்தார்கள்.

ஆனால் ஆட்களும் நெல்லும் அரசர் எதற்காகத் திரட்டுகிறார் என்று அறிந்தபோது ஜனங்களுடைய உற்சாகம் வெகுவாகக் குறைந்துவிட்டது. "உறையூருக்குக் கிழக்கே ஒரு காத தூரத்தில் அரசர் காவேரிக்கு அணை கட்டப் போகிறாராம்! அதற்காகத்தான் ஆள் சேர்க்கிறாராம்!" என்று தெரிந்தவுடனே முக்கால்வாசிப் பேருக்குச் 'சீ' என்று போய்விட்டது.

"கையிலே வாளும் வேலும் ஏந்திப் போர்க்களம் சென்று வீரச் செயல்கள் புரியலாம் என்று நினைத்தோமே? கேவலம் மண்வெட்டியும் தட்டுக் கூடையும் கொண்டு மண்ணை வெட்டிக் கொட்டும் வேலையை மன்னர் தருகிறாரே!" என்று வீர வாலிபர்கள் வருந்தினார்கள். வேறு சிலர், "காவேரி ஆற்றையாவது, தடுத்து அணை போடுவதாவது? ஆடி மாதத்துப் புது வெள்ளம் வந்ததும் ஓரேயடியாக உடைத்துக் கொண்டு போய்விடாதா? இது என்ன அறிவீனம்?" என்றார்கள். "அரசருக்குத் திடீரென்று பித்தம் தலைக்கேறி விட்டது போலிருக்கிறது! அரண்மனை வைத்தியர்கள் நன்றாகக் கவனிக்க வேண்டும்!" என்றார்கள் வேறு சிலர். "இல்லை, இல்லை. நம் அரசர் அறிவற்றவரும் அல்ல; பைத்தியக்காரரும் அல்ல. இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. அணைக்கட்டு என்று சொல்லி மாபெருங் கோட்டை ஒன்றைக் கட்டப் போகிறார் போலும்! அல்லது பகை நாட்டை எட்டும்படியான இரகசியச் சுரங்க வழியைத் தயாரிக்கிறார் போலும்!" என்று சில அதிமேதாவிகள் அபூர்வமான ஹேஷ்யங்களைச் சொன்னார்கள்.

ஆனால் காவேரித் தண்ணீர் குடித்து வளர்ந்த அறிவாளிகள் சிலர் மட்டும் மேலே கண்ட வம்புப் பேச்சுகளையெல்லாம் ஒப்புக்கொள்ளவில்லை. "அரசர் வெளிப்படையாகச் சொல்லுகிறதையே காரியத்திலும் செய்யப் போகிறார். காவேரி நதியைத் தடுத்து அணை போடவே போகிறார். அதன் மூலம் தண்ணீரைத் தேக்கி நாடெங்கும் சிற்றாறுகளின் மூலமாக வயல்களுக்குப் பாய்ச்சிச் சோழநாட்டை வளம் கொழிக்கும் நாடாகச் செய்யப் போகிறார். அரசர் இன்று தொடங்கும் இந்தத் திருப்பணியின் பயனைச் சோழநாட்டு மக்கள் தலைமுறை தலைமுறையாக ஆயிரம் ஆண்டுகள் அநுபவிக்கப் போகிறார்கள்!" என்று உறுதி கூறினார்கள்.

அந்த அறிவாளிகள் கூறிய உறுதிமொழியே உண்மையாயிற்று. அன்று சோழ மன்னன் கட்டிய கல்லணையை இன்றைக்கும் திருச்சிக்குக் கிழக்கே ஒரு காத தூரத்தில் நாம் பார்க்கலாம். அந்த அணைக் கட்டின் காரணமாகக் காவேரி நதியில் வந்த வெள்ளம் கணக்கற்ற சிற்றாறுகளின் வழியாகவும் வாய்க்கால்களின் வழியாகவும் பரவிப் பாய்ந்து நாட்டை வளப்படுத்திற்று. சோழநாடு சோறுடைத்தாயிற்று. தஞ்சை ஜில்லா நெற் களஞ்சியம் ஆயிற்று.

இன்றைக்கும் கல்லணையைப் போய்ப் பார்க்கும் மேனாட்டு என்ஜினியரிங் நிபுணர்கள் மூக்கின்மேல் விரலை வைத்து அதிசயப்படுகிறார்கள். அந்தக் கல்லணை சம்பந்தமான எந்த அதிசயத்தைப் பற்றி அதிகமாக ஆச்சரியப்படுவது என்று தெரியாமல் திகைத்து நிற்கிறார்கள். ஒரு பெரிய நதியில் வரும் தண்ணீரில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட வீணாகாமல் பயிர்த் தொழிலுக்குப் பயன்படுத்திய நீர்ப்பாசனத் திட்டம் இதுபோல் பழைய காலத்தில் உலகில் எங்கும் இல்லையே என்பதை எண்ணி வியக்கிறார்கள். செமெண்டும் இரும்பும் நீராவியும் மின்சாரமும் பலவகை அற்புத இயந்திரங்களும் இல்லாத அந்தப் பழைய காலத்தில் இவ்வளவு உறுதியான அணையை,—ஆயிரம் வருஷத்துக்கு மேலே காவேரி வெள்ளத்தைத் தாங்கி நின்று நிலைத்திருக்கக்கூடிய அணையை, — அந்தப் பழங் காலத்துத் தமிழர்கள் எப்படித்தான் கட்டினார்களோ என்று எண்ணி ஆச்சரியக் கடலில் மூழ்கி விடுகிறார்கள்.

அப்படிப்பட்ட பழந்தமிழ்நாட்டு என்ஜினியர்களின் பரம்பரையில் தோன்றியவர்கள் இந்த நாளிலும் நம் நாட்டில் இருக்கிறார்கள் என்பதைச் சென்ற வாரத்தில் நான் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டேன். லோயர் பவானி அணைக்கட்டு வேலையைப் பார்வையிடுவதற்காகச் சென்ற மராமத்து மந்திரி கனம் பக்தவத்ஸலம் அவர்களோடு போனதில் அதைத் தெரிந்து கொள்ளும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

* * *

அணைக்கட்டு வேலையைப் பற்றி மேலே சொல்லுவதற்கு முன்னால் கனம் மந்திரியுடன் பிரயாணம் செய்ததில் எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைப் பற்றிச் சொல்லி விட விரும்புகிறேன். மந்திரியின் பிரயாணம் என்றால் அந்தப் பதவிக்கு உரிய ஆடம்பரங்களுடனும் அதிகார தோரணைகளுடனும் இருக்கும் என்றும் எதிர்பார்த்தேன். ஒவ்வொரு கனம் மந்திரியும் ரயிலில் நாலு முதல் வகுப்பு ஸீட்டுகள் ரிஸர்வ் செய்து கொண்டு போகலாம் என்று உரிமை இருக்கிறது. அதன்படி நாலு முதல் வகுப்பு ஸீட்டுகளில் கனம் பக்தவத்ஸலம் பிரயாணம் செய்வார் என்றும் சிப்பந்திகளும் வில்லைச் சேவகர்களும் போலீஸாரும் புடைசூழ்ந்து வருவார்கள் என்றும் வழியெங்கும் தடபுடலாயிருக்கும் என்றும் ரயிலிலிருந்து இறங்கும் இடத்தில் மேள தாளங்களுடன் வரவேற்பு வைபவங்கள் பிரமாதப்படும் என்றும் எண்ணினேன். இதிலெல்லாம் ஏமாற்றம் ஏற்பட்டது.

காங்கிரஸ்காரர்களிலே சட்டை யில்லாப் படை என்பதாக ஒரு பிரிவு உண்டு. கனம் பக்தவத்ஸலம் அந்தப் பிரிவைச் சேர்ந்தவர் அல்ல. ஆனால் அடுத்தபடியாக 'அரைக் கை பனியன் படை' ஒன்று ஏற்படுத்தினால் அதில் கனம் பக்தவத்ஸலம் சேரக் கூடியவர். உடை விஷயத்தில் போலவே மற்ற எல்லாக் காரியங்களிலும் அடக்கத்தை அணிகலனாகப் பூண்டிருக்கிறார்.

மந்திரிகள் அடக்கமாக * இருப்பதிலும் படாடோபமின்றிப் பிரயாணம் செய்வதிலும் சில அனுகூலங்கள் இருக்கின்றன. பிறருடைய அசூயைக்கும் ஆளாக வேண்டியதில்லை. "நேற்று வரையில் நம்மைப்போல் சாதாரணமாயிருந்தார். இன்று பதவிக்கு வந்ததும் என்ன ஆடம்பரம் செய்கிறார் பார்!" என்று யாரும் கோபப்பட மாட்டார்கள். பிரயாண மார்க்கத்திலும் போகும் இடங்களிலும் வீண் ஜனக்கூட்டம் சேராது. உத்தேசித்துப் போகும் காரியத்தில் தமது முழு கவனத்தையும் செலுத்தி நிம்மதியாக நடத்தி விட்டுத் திரும்பி வரலாம்.

ஆனால் இத்தகைய அடக்கத்தை ரொம்ப அதிகமாக மந்திரிகள் மேற்கொள்ளக் கூடாது என்ற ஒரு கட்சி இருக்கிறது. பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டு ஆட்சி பீடத்துக்கு வருகிறவர்கள் அந்தந்தப் பீடத்துக்குத் தகுந்தபடி கொஞ்சம் அதிகார அமுலையும் ஆடம்பரத்தையும் கைக்கொள்ள வேண்டியது அவசியம். மக்கள் யாவரும் சரிநிகர் சமானம் என்ற சமதர்மப் பொதுவுடைமைக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் ருஷியாவில், தோழர் ஸ்டாலின் அவர்களையும், வெளிநாடுகளுக்குச் செல்லும் தோழர் அம்பாஸடர்களையும் பாருங்கள்! எவ்வளவு ஜோராக உடை உடுத்திக் கொள்கிறார்கள்! பல வகை மெடல்களையும் எப்படிப் பளபள வென்று மெருகிட்டு அணிந்து கொள்கிறார்கள்! தோழர் ஸ்டாலின் தோழர் பொது ஜனத்துக்குக் காட்சி தருகிறார் என்றால், அவருக்கு முன்னாலும் பின்னாலும் நாலா பக்கங்களிலும் தோழர்கள் போலீஸாரும் தோழர்கள் சேனா வீரர்களும் எப்படி அணிவகுத்து 'மார்ச்' பண்ணிக் கொண்டு போகிறார்கள்!—ருஷியாவிலேயே அத்தகைய உத்தியோக அதிகார ஆடம்பரங்கள் தேவை என்றால், இந்தியாவிலே வேண்டாமா?—தோழர் ஸ்டாலின் தமக்குப் 'பெர்ஸனாலிடி' அவ்வளவு போதாது என்

பதை உத்தேசித்து எப்படி ஜோராக மீசையை முறுக்கி வளர்த்துப் 'பெர்ஸனாலிடி'யை உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறார்?—இதையெல்லாம் நம்முடைய மந்திரிமார்கள் கொஞ்சம் கவனிக்க வேண்டும் என்று சிலர் சொல்கிறார்கள். இந்த இரண்டாவது கட்சியில் கனம் பக்தவத்ஸலத்துக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கை இல்லை என்று தெரிந்து கொண்டேன். அடக்கத்தினாலும் ஆடம்பரமற்ற வேலைத்திறத்தினாலும் செய்ய முடிந்தவரை போதும்,—பெர்ஸனாலிடியும் அலங்கார தோரணையும் வேண்டியது இல்லை யென்று அவர் கருதுவதாகத் தெரிந்தது.

• • •

மேட்டுப்பாளையம் ரயில்வே ஸ்டேஷனில் கனம் மந்திரிக்கு ஆடம்பரமில்லாத வரவேற்பு நடந்தது. இரண்டொரு காங்கிரஸ் தொண்டர்கள் வந்திருந்தார்கள். முன்னாலேயே தங்களுக்குத் தகவல் தெரிவியாததுபற்றி அவர்கள் வருத்தம் தெரிவித்தார்கள். பின்னர், என்ஜினீயரிங் இலாகா உத்தியோகஸ்தர்கள் மராமத்து மந்திரியை ஏற்றுக் கொண்டார்கள். மேட்டுப்பாளையம் ஸ்டேஷனிலிருந்து இருபத்தைந்து மைல் தூரத்தில் அணைக்கட்டு வேலை நடந்த இடத்துக்குக் கார்களில் புறப்பட்டோம்.

எங்களை அழைத்துச் சென்ற என்ஜினீயர்களில் முதல்வர் சீப் என்ஜினீயர் ஸ்ரீ ஏ. ஆர். வேங்கடாச்சாரியார். பவானி அணைக்கட்டு வேலை இவருடைய நேரான மேற்பார்வையிலேதான் நடக்கிறது.

ஸ்ரீ ஏ. ஆர். வேங்கடாச்சாரியாரிடம் பத்து நிமிஷம் பேசிக்கொண்டிருந்தால் போதும்; அவருடைய அறிவாற்றல் எத்தகையது என்பதை அறிந்து கொள்ளலாம். அவருடைய தோற்றமும், சொல்லுறுதியும், பேச்சில் தெளிவும் அவரிடம் நமக்குப் பரிபூரண நம்பிக்கையை உண்டாக்கும். எவ்வளவு பெரிய வேலையையும் முக்கிய வேலையையும் அவரிடம் தயங்காமல் ஒப்புவிக்கலாம் என்று தோன்றும். "வங்காளக் குடாக் கடலுக்கு ஒரு அணை போட்டுக் கொடுங்கள்!" என்று ஸ்ரீ ஏ. ஆர். வேங்கடாசாரியிடம் கூசாமல் கூறலாம். "கங்கைக்கும் வைகைக்கும் ஒரு கால்வாய் தோண்டிக் கொடுங்கள்!" என்று அவரிடம் தைரியமாகச் சொல்லலாம். "மேட்டூர் அணைக்கட்டைத் தூக்கி வந்து பாலாற்றில் போடுங்கள்" என்றும் சொல்லலாம். ஆம்; ஸ்ரீ வேங்கடாச்சாரியிடம் எதை வேண்டுமானாலும் நாம் சொல்லலாம். ஆனால் அது நடக்கிற காரியமாக இருந்தால் மட்டுமே ஸ்ரீ வேங்கடாச்சாரியார் "செய்கிறேன்" என்று ஒப்புக் கொள்வார். நடவாத காரியமாயிருந்தால், திட்டமாக "முடியாது" என்று சொல்லி விடுவார்.

சமீபத்தில் இந்திய சர்க்கார் உணவு மந்திரி கனம் தௌலத்ராம் சென்னைக்குச் சில நடபுடலான ஏரி நீர்ப்பாசனத் திட்டங்களுடன் வந்தார். அந்தத் திட்டங்களிலே எவ்வளவு நடக்கக் கூடியவை என்பதை நம் சீப் என்ஜினீயர் எடுத்துரைத்தார். இவருடைய தெளிவான ஆதாரங்களுடன் கூடிய வாதங்களைக் கேட்டதும் கனம் தௌலத்ராம் "உங்களுக்குத் தெரியாத விஷயம் புதிதாக நான் என்ன சொல்லப்போகிறேன்? உசிதப்படி எது நடக்கிற காரியமோ, அதைச் சீக்கிரமாகச் செய்யுங்கள்!" என்று சொல்லி விட்டுத் திரும்பிச் சென்றார்.

"செய்கிறேன்" என்று நம் சீப் என்ஜினீயர் ஒப்புக் கொண்டு விட்டால், அப்புறம் அக் காரியம் நிச்சயம் நடந்துவிடும் என்றும் எதிர்பார்க்கலாம். முதலில் அந்தக் காரியம் அவருடைய மனதில் பூரணமாக உருவாகும். பிறகு காகிதத்தில் புள்ளி விவரத் திட்டமாக உருவாகும். அப்புறம் நூறு, இருநூறு, ஐந்நூறு பிளான்களாக உருவாகும். அந்தக் காரியத்துக்கு வேண்டிய தளவாட சாமான்கள் உலகத்தில் எந்தப் பகுதியில் இருந்தாலும் வந்து சேரும். காரியம் நடப்பதற்கு வேண்டிய தகவல்கள் வட துருவத்திலோ, தென் துருவத்திலோ இருந்தபோதிலும் அந்தத் தகவல்கள் சேகரிக்கப்படும்.

"இந்த லோயர் பவானி அணைக்கட்டுத் திட்டம் முதன் முதலில் யாருடைய மனதில் தோன்றியது?" என்று சீப் என்ஜினீயர் ஏ.ஆர். வேங்கடாச்சாரியாரைக் கேட்டேன்.

"சென்னை மாகாணத்து அணைக்கட்டுத் திட்டங்கள் எல்லாவற்றுக்கும் ஆதி கர்த்தா ஆர்தர் காட்டன் என்னும் ஐரோப்பிய என்ஜினீயர்தான்!" என்றார் ஸ்ரீ வேங்கடாச்சாரியார். (இந்த ஆர்தர் காட்டனுக்கும் ஹைதராபாத் புகழ் லிட்னி காட்டனுக்கும் சம்பந்தம் இல்லை என்பதை இங்கே சொல்லி வைக்கிறேன்.) பல வருஷங்களுக்கு முன்னால் சென்னை மாகாணத்துச் சீப் என்ஜினீயர் வேலை பார்த்த ஆர்தர் காட்டன் இந்த மாகாணத்தில் உள்ள எல்லா நதிகளையும் நதி மூலங்களையும் பார்வையிட்டு இந்த இந்த இடத்தில் அணைக்கட்டுக் கட்டினால் நீர்ப்பாசனத்துக்கு உதவியாக இருக்கும்

என்று திட்டம் போட்டு விட்டுப் போனாராம். அப்போதே ஆரம்பித்துச் செய்திருந்தால் சொற்பச் செலவில் காரியம் முடிந்திருக்கும்; தமிழ் நாட்டின் வளமும் பெருகியிருக்கும். "ஆனால் சிவில் அதிகாரிகள் அவ்வளவு சீக்கிரம் ஒப்புக்கொண்டு விடுவார்களா? என்ஜினியர்கள் என்ன திட்டம் போட்டாலும் அதைத் தடுத்து நிறுத்தி வைப்பதில் சிவில் அதிகாரிகளுக்கு ஒரு சந்தோஷம். நெடுகிலும் இப்படித்தான் நடந்து வந்திருக்கிறது!" என்று ஸ்ரீ வெங்கடாச்சாரியார் சொன்னார். இந்தப் பரம்பரைத் தர்மத்துக்கு மாறாக 1946-ம் வருஷத்தில் ஒரு காரியம் நடந்தது. என்ஜினியர்கள் அடிக்கடி பழைய பைல்களில் உள்ள அணைக்கட்டுத் திட்டங்களைப் பற்றி ஞாபகப்படுத்துவது வழக்கம். அவ்வாறே அந்த வருஷமும் ஞாபகப்படுத்தினார்கள். அந்த வருஷத்தில் மராமத்து இலாகா மந்திரியாகக் கனம் பக்தவத்ஸலம் வந்திருந்தார். அவர் மாமூல் வழக்கப்படி அணைக்கட்டுத் திட்டங்களைப் பார்த்து விட்டுச் சிவப்பு நாடா கட்டிய 'பைல்'களுக்குள்ளேயே பழையபடி அவற்றைப் போட்டுவிடவில்லை. தென்னாட்டில் ஏற்பட்டிருந்த உணவு நெருக்கடியைக் கருதியும் பொதுவாக நாட்டின் முன்னேற்றத்தைக் கருதியும் சில அணைக்கட்டுத் திட்டங்களை வேலை ஆரம்பிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அதற்குப் பல முட்டுக்கட்டைகள் நேர்ந்தன. மந்திரி சபைக்குள்ளேயே சிலர் ஆட்சேபித்தார்கள். ஆனால் அதிர்ஷ்டவசமாக, அச்சமயம் பிரதம மந்திரியாயிருந்த கனம் பிரகாசம் மராமத்து மந்திரியின் கட்சியை ஆதரித்தார். ஆகவே சில அணைக்கட்டுத் திட்டங்களை வேலைக்கு எடுத்துக் கொள்வது என்று தீர்மானமாயிற்று. உடனே வேலை ஆரம்பித்துச் சீக்கிரத்தில் முடிக்கக் கூடிய அணைக்கட்டுத் திட்டங்களில் ஒன்று 'லோயர் பவானி அணைக்கட்டுத் திட்டம்' என்று ஏற்பட்டது.



மராமத்து மந்திரிக்கு பவானி அணைக்கட்டுப் பிளான்கள் காட்டப்படுகின்றன.

மந்திரி சபையின் ஆதரவு கிடைத்ததும் என்ஜினியரிங் இலாகா உற்சாகமும் சுறுசுறுப்பும் அடைந்தது. அணைக்கட்டு வேலைக்கு வேண்டிய பிளான்கள் தயாரிக்கப்பட்டன. பிளான்கள் என்றால் ஒன்று, இரண்டா? நூற்றுக் கணக்கான பிளான்கள்!

பிறகு சாமான்களின் சேகரம் ஆரம்பமாயிற்று. இந்தக் காலத்தில் ஒரு பெரிய அணை கட்டுவதற்கு வேண்டிய சாமான்கள் சேகரிப்பதென்றால் சாமான்யமான காரியமா? வேண்டிய சாமான்களின் ஜாபிதாவைப் பார்த்ததுமே யாரும் பிரமிப்பு அடைந்து "அணையாவது? கட்டவாவது?" என்று தீர்மானித்து விடுவார்கள். அணைக்கட்டு வேலை ஆரம்பிப்பதற்குப் பூர்வாங்க ஏற்பாடுகள் செய்வதே பிரம்மப் பிரயத்தனமான காரியம். உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள், தொழிலாளிகள் தங்குவதற்குப் பெரிதும் சிறிதுமாகச் சுமார் இரண்டாயிரம் வீடுகள் கட்டியாக வேண்டும்! அதாவது ஒரு சின்ன டவுன் நிர்மாணம் செய்தாக வேண்டும். டவுனுக்கு வேண்டிய சாலைகள், சுகாதார வசதிகள், தண்ணீர் வசதிகள், மின்சார வசதிகள், பள்ளிக்கூடங்கள், தபால் தந்தி ஆபீஸ்கள், ஹோட்டல்கள், கடைகள் எல்லாம் தயாராக வேண்டும். அணைக்கட்டின் அருகில் கல்லும் மணலும் மற்றும் வேண்டிய பொருள்களும் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காகப் பல மைல் நீளமுள்ள தண்டவாளங்கள் வேண்டும்; அவற்றில் போகும் டிராலிகள் வேண்டும்; சாலைகளில் போகும் லாரிகள் வேண்டும். வீடு கட்டவும் வேலி எடுக்கவும் ஒர்க்ஷாப் அமைக்கவும் ஏராளமான இரும்பு வேண்டும்; ஸிமெண்ட் வேண்டும்; தகரத் தகடுகள் வேண்டும்; அஸ்பெஸ்டாஸ் வேண்டும்.—இவ்வளவு சாமான்களையும் ஜாபிதா போட்டுப் பார்த்தாலே தலை கிறுகிறுத்துப் போய்விடும்.

ஆனால் சீப் என்ஜினியர் வெங்கடாச்சாரியாருக்கு அப்படித் தலை கிறுகிறுத்துப் போக

வில்லை. யுத்தம் முடிந்த சமயமாதலால் இராணுவ இலாகாவிலிருந்து பல சாமான்களைச் சம்பாதிக்கத் தீர்மானித்தார். அதற்காக அவர் இராணுவ இலாகாவோடு நடத்திய தீரப் போராட்டத்தைப் பற்றிச் சொன்னால் அதுவே ஒரு பெரிய இதிகாசமாயிருக்கும். ஓரளவு இரும்புக்கம்பி ஆவடி ராணுவ டெப்போவில் இருந்தது. அதை வாங்குவதற்காக இராணுவ இலாகாவுக்கு எழுதி மன்றாடிக் கடைசியில் அநுமதி கிடைத்தது. சாமானை டெலிவரி எடுப்பதற்காக ஆவடிக்குப் போனபோது "அநுமதி ரத்தாகி விட்டது" என்று செய்தி வந்திருந்தது. மறுபடியும் ஸ்ரீ வெங்கடாச்சாரியார் மேற்படி சாமான் இராணுவத்துக்குப் பயன்படாது என்று வாதமிட்டு வழக்காடி இரண்டாந் தடவையும் அநுமதி பெற்றார். இந்தத் தடவையும் டெலிவரி எடுக்கப் போகும்போது மறுபடியும் தடை உத்தரவு வந்துவிட்டது. "இண்டஸ்ட்ரீஸ் ஸப்ளைஸ் இலாகாவுக்கு வேண்டுமாம்! டெலிவரி கொடுக்காதே!" என்று உத்தரவு. ஸ்ரீ வெங்கடாச்சாரியார் பழையபடி டெல்லிக்குப் போய் இண்டஸ்ட்ரீஸ் ஸப்ளைஸ் இலாகாவுடன் மல்யுத்தம் செய்ய வேண்டியதாயிற்று. தமக்கு உதவியாக இந்திய சர்க்காரின் உணவு இலாகா, மாராமத்து இலாகா மந்திரிகளின் சிபார்சைக் கோரினார். அவர்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா? "இராணுவ இலாகாவிலிருந்து எல்லாச் சாமான்களையும் நாங்கள் வாங்கி ஒன்றாய்ச் சேர்த்துவைத்துக் கொள்கிறோம். பிறகு எல்லா மாகாணங்களிலிருந்தும் தேவைகளுக்கு விண்ணப்பங்கள் வரவழைக்கிறோம்! பிற்பாடு விகிதாசாரப்படி பகிர்ந்து கொடுக்கிறோம்!" என்றார்கள். இந்த முறைப்படி சாமான்கள் வந்து சேர்வதற்குள், இப்போது இம் மாகாணத்தில் வேலை செய்யும் என்ஜினியர்களில் பெரும்பாலோர் ரிடயர் ஆனாலும் ஆகிவிடுவார்கள்!

இப்படியாகப் பல முட்டுக்கட்டைகளுடன் போராட்டம் நடத்தி ஸ்ரீ வெங்கடாச்சாரியார் சாமான்களைச் சேகரித்தார். இம்மாதிரி பூர்வாங்க வேலைகள் ஒருபுறம் நடந்துகொண்டிருக்கையில் நம் என்ஜினியர்கள் வேறொரு முக்கியமான பிரச்னையை முடிவு செய்ய வேண்டியிருந்தது. அணைக்கட்டை எந்த முறையில் கட்டுவது என்பதுதான் அந்தப் பிரச்னை. கண்ணம்பாடியிலும் மேட்டூரிலும் கல்லையும் செமண்டையும் சுண்ணாம்பையும் கொண்டு அணைகள் கட்டப்பட்டன. துங்கபத்ராவில் இப்போது சுண்ணாம்புடன் ஸுர்க்கி (அதாவது செங்கல் பொடி) சேர்த்து அணை கட்டிக் கொண்டு வருகிறார்கள். பவானி அணைக்கட்டுக்கு எந்த முறையைக் கையாளுவது?

அவ்வளவு கல்லும் சுண்ணாம்பும் செமெண்டும் சேர்ப்பதில் உள்ள கஷ்டங்களைத் தவிர பணச் செலவும் ஏராளமாகும்.

இதை யெல்லாம் உத்தேசிக்கும்போது மண்ணைக் கொண்டே ஏன் அணை கட்டக் கூடாது என்ற கேள்வி எழுந்தது.

தமிழ் நாட்டில் எத்தனையோ பெரிய ஏரிகளில் தேங்கி நிற்கும் தண்ணீரை மண் அணைகள் எவ்வளவோ காலமாகக் காத்துக்கொண்டு நிற்கவில்லையா?

அணைக்கட்டில் தண்ணீர் பாயவேண்டிய மத்தியப் பிரதேசத்தில் மட்டும் கல், செமெண்ட், சுண்ணாம்பை உபயோகப்படுத்தி விட்டு, மற்றப் பெரும் பகுதிக்கு மண் அணையே போட்டு விடலாம் என்று நம்முடைய என்ஜினியர்கள் தீர்மானித்தார்கள். ஆனால் ஏரிக்குக் கரை போடுவதுபோல் அல்ல ஒரு பெரிய நதியைத் தேக்கி அணைக் கட்டுப் போடும் விஷயம். ஏரிக்கரை பொத்துக் கொண்டால் ஒருவாறு சமாளித்துக் கொள்ளலாம். அணைக்கட்டில் உடைப்பு ஏற்பட்டால் கோடி கோடி ரூபாய் அரோகரா ஆகிவிடும்! ஆகையால் அணைக்கு உபயோகிக்கும் மண் குறிப்பிட்ட தரம் உடையதாயிருக்க வேண்டும். அதைத் தகுந்தபடி பக்குவப்படுத்தி உபயோகிக்க வேண்டும். அமெரிக்காவில் சமீபத்தில் மண் அணை போட்டுப் பெரிய அணைக்கட்டுக் கட்டியிருக்கிறார்கள் என்று தெரிந்தது. ஆகவே சென்ற வருஷத்தில் நமது சென்னை என்ஜினியரிங் இலாகாவைச் சேர்ந்த என்ஜினியர்கள் சிலர் அமெரிக்காவுக்கு அனுப்பப் பெற்றனர். அங்குள்ள மண் அணைக்கட்டுகளை நேரில் பார்த்து எப்படிச் செய்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளுவதற்கும், மற்றும் பல என்ஜினியரிங் நுட்பங்களைத் தெரிந்து கொண்டு வருவதற்குத்தான். அமெரிக்காவிற்குச் சென்றவர்களில் சிலர் இன்னும் திரும்பி வரவில்லை. திரும்பி வந்தவர்களில் ஒருவர் ஸ்ரீ ஆனந்தராவ். பவானி திட்டத்தின் ரூபரிண்டிங் என்ஜினியர் இவர்தான். தற்சமயம் இவருடைய தலைமை ஆபீஸ் சென்னையிலேதான் இருக்கிறது. அணைக்கட்டுக்கு எந்தமாதிரி மண்ணை எந்தப் பக்குவத்தில் உபயோகிக்க வேண்டும் என்ற ஆராய்ச்சியை இவர் நடத்தி வருகிறார். ஆராய்ச்சி அநேகமாக முடிந்து விட்டது. மேட்டுப் பாளையத்தில் கனம் பக்தவத்ஸலத்தை அழைத்துப் போக வந்த என்ஜினியர்களில் ஸ்ரீ ஆனந்தராவும் ஒருவர்.

(அடுத்த இதழில் முடியும்)

# அறிஞர் வினோபா

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு ஒரு நாள் ஒரு மகாராஷ்டிர இளைஞன் அடுப்பண்டை உட்கார்ந்து குளிர் காய்ந்து கொண்டிருந்தான். அதே சமயத்தில் தன் கையிலிருந்த ஒரு காகிதங்களைச் சுக்குச் சுக்காகக் கிழித்து அடுப்பில் போட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய தாய் அதைப் பார்த்துவிட்டு, "என்னடா செய்கிறாய்?" என்று கேட்டாள்.

"ஒன்றும் இல்லை! என்னுடைய சர்டிபிகேட்டை நெருப்பில் போட்டுக் கொளுத்துகிறேன்" என்றான் அந்த இளைஞன்.

அவனுடைய தாய் திடுக்கிட்டு, "எந்த சர்ட்டிபிகேட்டை?" என்று கேட்டாள்.

"இண்டர்மீடியட் சர்ட்டிபிகேட்டை" என்று பதிலளித்தான் இளைஞன். அந்த இளைஞன்தான் ஆச்சாரிய வினோபாபாவே.

இந்த உதவாக்கரைப் படிப்பாலும் பட்டங்களாலும் யாருக்கும் கொஞ்சங்கூடப் பிரயோஜனமே இல்லை என்பதை ஸ்ரீ வினோபாஜி மாணவனாக இருக்கும்போதே நன்றாகத் தெரிந்து கொண்டுவிட்டார்.

தற்போதையக் கல்வி முறை எப்படி இருக்கிறது என்பதைப் பற்றி ஆச்சாரிய வினோபா கூறுவதைக் கேளுங்கள்:

"இந்தக் காலத்து விசித்திரக் கல்வி முறையினால் வாழ்க்கை இரண்டு தனித் துண்டுகளாக ஆகியிருக்கிறது. மனிதன் தன் ஆயுளில் முதல் இருபது வருஷம் வாழ்க்கைப் போராட்டத்தின் பக்கமே எட்டிப் பாராமல் கல்வியை மட்டும் கற்றுக் கொள்வது ஒரு பகுதி; பிறகு கல்வியை ஓரே யடியாக மூட்டை கட்டி வைத்து விட்டுச் சாகும் வரைக்கும் வாழ்வது மற்றொரு பகுதி. இந்த இரண்டு பகுதிகளும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் போய்விடுகின்றன."

வாழ்க்கைக்கும் இக்காலக் கல்வி முறைக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமலிருப்பதை ஸ்ரீ வினோபா பாவே எவ்வளவு நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறார்!

இன்னும் அவர் சொல்லுவதைக் கேளுங்கள்:

"குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனனுக்குப் பகவத்கீதையை உபதேசித்தார் பகவான். அவர் முதலில் பள்ளிக்கூடம் நடத்தி அர்ஜுனனுக்குப் பகவத்கீதை 'லெக்சர்' செய்த பிறகு அர்ஜுனனைக் குருக்ஷேத்திரத்தில் பிடித்துத் தள்ளவில்லை. போர்க்களத்திலேயே உபதேசித்ததினால்தான் அர்ஜுனனுக்குக் கீதை ஜீரணமாயிற்று. 'வாழ்க்கைக்குத் தயார் செய்வதற்கான கல்வி அறிவு' உண்மையில் வாழ்க்கையுடன் தொடர்புள்ளதாக இருக்க வேண்டும்."

கல்வித் துறையில் இத்தகைய புரட்சிகரமான கருத்துக்கள் கொண்ட ஆச்சாரிய வினோபா பாவே அவர்கள், சென்ற மாதம் 7-ம் தேதி கோவை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயத்தில் கூடிய அகில இந்திய ஆதாரக் கல்வி மகாநாட்டைத் திறந்து வைத்தார்.

மேற்படி விழா முடிந்த பிறகு தமிழ் நாட்டில் உள்ள பல முக்கிய நகரங்களையும் புண்ணிய ஸ்தலங்களையும் வினோபாஜி தரிசித்தார். சென்னையில் நடந்த தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபா வருஷாந்திரப் பட்டமளிப்புக்குத் தலைமை வகித்துவிட்டுச் சென்னையை விட்டுச் சென்றார்.

கிராமத்திலிருந்து பட்டணத்துக்குச் சென்று சமுத்திரத்தைப் பார்த்துவிட்டு வந்த ஒருவரிடம் பட்டிக்காட்டான் ஒருவன் போய், "சமுத்திரம் எப்படியிருக்கும்?" என்று கேட்டானாம். அவர் என்ன சொல்லுவது என்று விளங்காமல் "சமுத்திரமா? அது மிகவும் பெரியது" என்று சொன்னாராம்.




ஸ்ரீ வினோபா பாவேயைச் சந்தித்து அவருடன் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்த ஒரு நண்பரைப் பார்த்து, "வினோபாஜியைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று நான் கேட்டேன்.

அவர் பதில் சொல்ல முடியாமல் திணறினார். பிறகு, "வினோபா ஒரு அருள்வாளி" என்றார். அதற்கு மேல் அவரால் எதுவும் சொல்ல முடியவில்லை.

ஸ்ரீ வினோபா வேதங்களையும் உபநிஷத்துக்களையும் கரைத்













னக் குடித்தவர். அவருடைய அறிவையும் மேதையையும் காந்தி மகான் பலமுறை பாராட்டியுள்ளார்.

ஒரு நாள் அவர் காந்திஜியிடம் போய், "நான் சமஸ்கிருதம் படிக்கப் போகிறேன். ஒரு வருஷம் கழித்துத்தான் திரும்பி வருவேன்" என்றாராம். காந்திஜியும் அதற்கு "சரி" என்று சொல்லி விட்டாராம்.

ஒரு வருஷம் கழித்துச் சரியாக அதே நேரத்துக்கு அவர் திரும்பி வந்தாராம்!

பாஷைகளுக்குள் அரபு பாஷை மிகவும் கஷ்டமானது. அந்த பாஷையை ஸ்ரீ விநோபா தம்முடைய நாற்பத்தாறாம் வயதில் கற்கத் தொடங்கி, குர் ஆன் வரிகளை மனப்பாடமாக ஓதக்கூடிய சக்தியைப் பெற்று விட்டாராம்.

அது மாத்திரமா? கொஞ்ச காலத்துக்கு முன்பு அவர் தமிழ் கற்க ஆரம்பித்திருப்பதாக ஒரு செய்தி வந்தது அல்லவா? இப்போது தமிழ் மொழியை நன்றாகப் படித்து விளங்கிக் கொள்ளக்கூடிய அளவுக்குத் தேர்ச்சி அடைந்து விட்டார். கம்ப ராமாயணத்தை அவர் பெரிதும் ரசிக்கிறாராம்.

ஸ்ரீ விநோபா பாவே புகழையோ பெருமையையோ விரும்பாதவர். வெகு காலம் வரை அவரை யாருக்கும் தெரியாது. அத்தகையவரைத் தேடிப் புகழும் பெருமையும் வந்தது. 1940-ம் வருஷம் நடந்த தனிநபர் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் காந்தி மகான் ஸ்ரீ விநோபாஜியை முதல் சத்தியாக்கிரகியாகத் தேர்ந்தெடுத்தார்.

விநோபாஜி காந்தி மகாத்மாவுக்கு உகந்த சிஷ்யர். காந்திஜியின் நிர்மாண திட்டங்களில் அவருக்குப் பரிபூரண நம்பிக்கை உண்டு. அந்த நிர்மாண திட்டங்களை நிறைவேற்றி வைப்பதற்காக அல்லும் பகலும் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்.

தமிழில் அதிக எழுத்துக்கள் இருப்பதால் டைப்ரைட்டிங், லினோ டைப் முதலியவற்றுக்கு இடையூறு ஏற்படுவதாகக் கேள்விப் படுகிறோமல்லவா? அதற்காகத் தமிழ் எழுத்துச் சீர்திருத்தமும் சில அறிஞர்கள் தொடங்கியிருக்கிறார்கள்.

ஆனால் ஆச்சாரிய விநோபா என்ன சொல்கிறார் தெரியுமா? ஹிந்தி எழுத்துக்கள் ரொம்ப அதிகமாக இருக்கிறபடியால் தமிழ் எழுத்து முறையை பொட்டிச் சில அம்சங்களில் தழுவி எழுத்து முறையைச் சீர்திருத்த வேண்டும் என்கிறார்!

ஸ்ரீ விநோபா பாவேயின் புனிதத் திருவுருவம் இந்த இதழ் "கல்கி" அட்டையில் பொலிந்து விளங்குவதைக் காணலாம். —"சபரீ"

# காளியின் கருணை!

கர்நாடகம்

“கடவுளைக் குறித்து உம்முடைய கருத்தை இன்னும் கொஞ்சம் விஸ்தரிக்க முடியுமா?” என்று சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள். “நாஸ்திகப் பிரசாரத்தைப் பற்றி உமக்குக் கவலை யில்லையா? ஹிந்து மதத்தைத் தூஷிப்பவர்களைக் குறித்து நடவடிக்கை எடுக்க வேண்டாமா?” என்று வேறு சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள்.

நல்லது; கடவுளைப் பற்றி என்னுடைய கருத்தை விஸ்தரிப்பதில் எனக்கு ஆட்சேபம் இல்லை; கடவுளுக்கும் ஆட்சேபம் இராது.

கடவுள் ஒருவர் உண்டு என்பதை நான் நம்புகிறேன். ஆனால் கடவுள் இல்லை என்று வாதிப்பவர்களிடத்தில் எனக்குக் கோபம் கிடையாது.

கடவுள் உண்டு என்று சொல்லவும் பிரசாரம் செய்யவும் எனக்கு எப்படி உரிமை கோருகிறேனோ, அப்படியே கடவுள் இல்லையென்று வாதிக்கவும் பிரசாரம் செய்யவும் பிறருக்கு உரிமை கொடுக்க விரும்புகிறேன்.

இந்தியா தேசத்தில் எந்த நாளிலும் “கடவுள் இல்லை” என்ற கட்சியும் பிரசாரமும் இருந்து வந்திருக்கின்றன.

மேனாடுகளில் ஒரு காலத்தில் “கடவுள் இல்லை” என்று சொன்னவர்களையும் வேறு விதத்தில் தேவதூஷணை செய்தவர்களையும் நெருப்பிட்டுக் கொளுத்தி வந்தார்கள். வேறு வித சித்திரவதைகளும் செய்தார்கள்.

ஆனால் இந்தியாவில் அம்மாதிரி என்றைக்கும் கிடையாது. இராமாயண காலத்தில் இராமரிடமே ஒரு முனிவர் நாஸ்திக வாதம் செய்து அவரைத் திருப்பப் பார்த்தார். அவருடைய முயற்சி பலிக்கவில்லை. ஆனால் நாஸ்திக வாதம் செய்த ஜாபாலி முனிவரை யாரும் எதுவும் செய்துவிட வில்லை.

இங்கர்ஸால் என்னும் அமெரிக்க ஆசிரியர் “கடவுள் இல்லை” என்று நிரூபிப்பதற்காக எவ்வளவோ சிரமப்பட்டுப் பல புத்தகங்களை எழுதினார். அப் புத்தகங்களைப் பலரும் படித்தார்கள்; ஆங்கிலம் படித்த இந்தியர்கள் உள்படத்தான். அதனால் உலகத்துக்கு ஒரு கெடுதலும் ஏற்பட்டுவிடவில்லை.

உண்மையான கடவுள் நம்பிக்கையானது நாஸ்திகப் பிரசாரங்களினால் அசைக்க முடியாததா யிருக்க வேண்டும்.

கடவுளுக்கு நாம் சப்பைக் கட்டுக் கட்ட வேண்டியதில்லை. “கடவுள் இல்லை” என்பதற்குரிய வாதங்கள் எல்லாவற்றையும் கேட்ட பிறகும் நிலைத்திருக்கும் கடவுள் நம்பிக்கை தான் உண்மையான ஆஸ்திகம். அறிவுக்குத் திரை போட்டு மறைத்துக் கடவுளை நம்பச் செய்வது உண்மை ஆஸ்திகம் அல்ல.

ஆகையால் இந்த நாளில் திராவிடக் கழகத்தாரும் மற்றவர்களும் செய்வதாகச் சொல்லப்படும் நாஸ்திகப் பிரசாரத்தைக் குறித்து நான் சிறிதும் கவலைப்படவில்லை.

நாஸ்திகப் பிரசாரம் ஒரு சில நாள் ஒரு சிலரைத்தான் பாதிக்க முடியும் என்றும் மற்றப் பெரும்பாலான ஜனத் திரள்களை ஒன்றும் செய்ய முடியாது என்றும் நான் நம்புகிறேன். என்னுடைய கடவுள் நம்பிக்கை தான் அதற்கு ஆதாரமானது.

• • •

கடவுளை விட்டுவிட்டு ஹிந்து மதத்துக்கு வருவோம். ஹிந்துமதத் தெய்வங்களையும், ஹிந்துமதக் கோவில்களையும், ஹிந்துக் கோட்பாடுகளையும் ஆதிகாலத்தி லிருந்து எத்தனையோ பேர் எதிர்த்திருக்கிறார்கள்; பிரசாரமும் செய்திருக்கிறார்கள்.

ஆனாலும் உலகத்திலேயே மிகப் பழைய மதமான ஹிந்து மதம் இன்னமும் ஜீவசக்தியுடன் விளங்கித்தான் வருகிறது.

புத்தபகவான் ஹிந்துமதத் தெய்வங்களையும் மற்றும் பல கோட்பாடுகளையும் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு சமயத்தில் இந்தியா முழுவதும் புத்தராகிய அசோகரின் ஆட்சியில் இருந்தது. லட்சக் கணக்கான புத்த பிக்ஷுக்கள் இந்தியா தேசம் முழுவதும் பரவிப் பிரசாரம் செய்தார்கள்.

ஆயினும் ஹிந்துமதம் அழிந்துவிடவில்லை. புத்தரை ஹிந்து மதம் ஓர் அவதாரமாக ஏற்றுக் கொண்டது. அவருடைய போதனை

களில் ஜீவகாருண்யத்தை ஏற்றுக் கொண்டு யாகங்களைக் கைவிட்டது. அதனால் ஹிந்து மதம் மறுபடியும் புத்துயிர் பெற்றுப் பரவிப் பெருகித் தழைத்தது.

கோவில்களை இடிப்பதையும் விக்கிரகங்களை உடைப்பதையும் மத கைங்கரியமாகக் கொண்ட முஸ்லிம்கள் இந்தியாவுக்கு வந்தார்கள்; இந்தியாவின் பெரும் பகுதியை வென்றார்கள்; ஆண்டார்கள்.

ஆயினும் ஹிந்து மதம் பிழைத்திருக்கிறது.

ஆங்கிலேயர்களின் பீரங்கிக்குப் பின்னும் முன்னும் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் வந்தார்கள். காளியைப் பற்றியும், கிருஷ்ணனைப் பற்றியும் வரம்பில்லாமல் தாக்கிப் பிரசாரம் செய்தார்கள். "நர பலி கேட்கும் காளியையும் ஸ்திரீலோலனான கிருஷ்ணனையும் கடவுள் எனக் கும்பிடுகிறீர்களே!" என்று பரிகசித்தார்கள். நாற்சந்தியில் நின்று பிரசாரம் செய்தார்கள்.

ஆயினும் ஹிந்து மதம் பிழைத்துத்தான் இருக்கிறது. பௌத்தர்களாலும், முஸ்லிம்களாலும், கிறிஸ்தவப் பாதிரிமார்களாலும் ஹிந்து மதம் அழிந்து போகவில்லை. திராவிடக் கழகத்தாரின் பிரசாரத்தினாலேதானா அழிந்துவிடப் போகிறது?

* * *

ஹிந்து மதத்தில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று, உலகத்தையும் ஜீவனையும் கடவுளையும் பற்றிய உண்மையைக் கூறும் தத்துவப் பகுதி. இதுதான் ஹிந்து மதத்தின் அடிப்படை; ஆணிவேர்; ஜீவநாடி; அழிக்க முடியாத சத்தியப் பொருள்.

இரண்டாவது, ஹிந்து மதத்தின் வெளிப்படையான கோட்பாடுகள், தெய்வ வழிபாட்டுக்குரிய முறைகள், ஆசாரங்கள், சம்பிரதாயங்கள். இவை ஹிந்து மதத்தின் முக்கிய அம்சங்கள் அல்ல. இவை அடிக்கடி மாறுபடுகிறவை. சிற்சில சமயம் இந்த வெளிக் கோட்பாடுகளில் அபரிமிதமான குருட்டு நம்பிக்கைகள் சேர்ந்து விடுகின்றன.

ஹிந்து மதத்துக்கு எதிரான பிரசாரம் ஹிந்துக்களின் அறிவைத் தூண்டிவிட உதவுகிறது. ஹிந்து மதத்தில் காலநடையில் சேர்ந்துவிட்ட குருட்டு நம்பிக்கைகளையும் அநாச்சாரங்களையும் போக்குவதற்கு முயற்சி தொடங்கத் தூண்டுகோலாகிறது.

புராணக் கதைகளையெல்லாம் வேத வாக்கு என்று நம்பிவிடாமல் அவை உட்பொருள் கொண்ட கதைகள் என்பதை ஆராய்ந்து உணர்வதற்கு உதவுகிறது.

வெளிக் கோட்பாடுகளுக்கும் உண்மைச் சமயத்துக்கும் உள்ள வித்தியாசம் ஹிந்து மதப் பெரியோர்களுக்குத் தெரியாமல் இருக்கவில்லை. சிலசமயம் ஜனங்களிடையே குருட்டு நம்பிக்கை அதிகமாய்ப் போன காலங்களில் நம் முன்னோர்கள் இடித்துக் காட்டி உண்மையைச் சொல்லியிருக்கிறார்கள்.

"கல்லினும் செம்பினுமோ இருப்பான்
எங்கள் கண்ணுதலே?"

என்று கூறிய பட்டினத்தடிகளைப் போல் இன்னும் பல மகான்களும் அடிக்கடி எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

ஆகையால் ஹிந்து மதத்துக்கும் ஹிந்து கோவில்களுக்கும் ஹிந்து தெய்வங்களுக்கும் எதிராகச் செய்யப்படும் பிரசாரத்தைப் பற்றி நான் கவலைப்படத் தயாராயில்லை.

ஆனால் நாஸ்திகர்களோ, திராவிடக் கழகத்தாரோ, மற்றவர்களோ, பிரசாரத்தோடு நில்லாமல், பலாத்காரத்தைக் கையாளத் தொடங்கும்போது அது நாட்டுக்கும் சமூகத்துக்கும் எதிரான குற்றமாகிறது.

கோவிலுக்குப் போக வேண்டாம் என்று பிரசாரம் செய்யட்டும். அதற்குக் காரணங்களை எடுத்துச் சொல்லட்டும்; எழுதட்டும்.

ஆனால் கோவிலுக்குப் போகிறவர்கள் மீது கல்லைப் போடும்படி சொன்னாலும், கோவிலுக்குள்ளே வந்து பக்தர்கள் மனம் புண்படும்படி நடந்துகொண்டாலும் அங்கே சர்க்கார் தலையிட்டே ஆகவேண்டும்.

பூணூலையும் உச்சிக் குடுமியையும் நாமத்தையும் திருநீற்றையும் சந்தனப் பொட்டையும் பற்றிப் பேச்சிலும் எழுத்திலும் சக்கைப் போடு போடட்டும்.

ஆனால் வைதிக நம்பிக்கையுள்ள ஓர் ஏழைப் பிராம்மணனின் பூணூலை அறுக்கவோ, ஒரு பக்தரின் நாமத்தையும் விபூதியையும் அழிக்கவோ யாரேனும் முற்பட்டால் அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கும் சர்க்கார் சர்க்காரே அல்ல. அத்தகைய சர்க்காரை நடத்தும் மந்திரிகள் கல்லைக் கட்டிக்கொண்டு கடலில் விழுந்து விடலாம்.

* * *

கடவுளையும் ஹிந்து மதத்தையும் இத்துடன் விட்டுவிட்டு, — திடுக்கிடாதீர்கள்! — "வேலைக்காரி" படத்துக்கு வரலாம்.

நாஸ்திகப் பிரசாரம் செய்கிற ஆட்சேபகரமான படம் என்று "வேலைக்காரி"யைப் பற்றிப் புகார்கள் கூறப்பட்டன. இந்தப் புகார்கள் காரணமாகச் சென்னை சர்க்காரின் மந்திரிகள் இருவர் மேற்படி படத்தைப் பார்த்தார்கள். அவர்களுடன் நானும் அப்படத்தைப் பார்க்கும்படி நேர்ந்தது.

புகாரைப் பற்றி விவாதிப்பதற்கு முன்னால் படத்தைப் பற்றிப் பொதுவாகச் சில விஷயங்களைச் சொல்ல வேண்டும்.

"வேலைக்காரி" தமிழ்நாட்டில் வெளி வந்துள்ள மிகச் சிறந்த படங்களில் ஒன்று. அதனுடைய சிறப்புக்குக் காரணங்கள் பின் வரும் அம்சங்கள் :

(1) கதையில் பொதுமக்களின் மனதைக் கவரும் கருத்துக்கள் பல இருக்கின்றன. ஏழைகள் பணக்காரர்களிடம் படும் கொடுமையைப் பற்றி விவரிக்கும் கதை. கொடுமைக்காளான ஏழை மனிதன் பணக்காரனைப் பழி வாங்குகிறான். உண்மைக் காதலுக்குச் சாதி வேற்றுமை இல்லை யென்பது ஸ்தாபிக்கப் படுகிறது. பணக்காரனுடைய பிள்ளை ஏழை வேலைக்காரியைக் காதலித்து மணக்கிறான். முடிவில், பணக்காரர்களின் கர்வம் ஒடுங்கி ஏழைகளின் கை ஓங்குகிறது.

எனினும், "நல்ல தம்பி" கதையைப் போல் குற்றமற்ற கதை என்று இந்தக் கதையைச் சொல்ல முடியாது.

குருட்டுப் பணக்கார ஸ்திரீயின் மகன் பத்து வருஷம் கழித்துத் திரும்பி வந்து கொலை செய்யப்படுவதும், அவனுடைய பிரேதத்தைச் சாக்கிலே கட்டிக் கிணற்றிலே போட்டிருப்பதும், அந்தப் பிரேதத்தின் கிஜார் பையிலிருந்த டைரியைப் பார்த்துக் கதாநாயகன் கொலையுண்டவனைப்போல் நடிப்பதும் அசம்பாவித நிகழ்ச்சிகள்.

ஒரு பணக்காரனைப் பழி வாங்குவதற்காக அவனுடைய மகளைக் கதாநாயகன் மணந்து கொண்டு கொடுமைப் படுத்துகிறான் என்பது அருவருப்பு உண்டாக்கும் நிகழ்ச்சி.

இந்தக் குறைகள் இருந்தாலும், நாடகத் திறமை காட்டி உணர்ச்சிமயமாக நடிக்க வேண்டிய கட்டங்கள் பல கதையில் இருப்பதால் வேலைக்காரி படம் சோபிக்கிறது.

2. ஸ்ரீ கே. ஆர். ராமசாமியும், ஸ்ரீ பாலையாவும் முதல்தர நடிப்புத் திறமையுடன் நடித்திருக்கிறார்கள். அவர்களுடைய பேச்சு ஒவ்வொன்றும் கணீர் கணீர் என்று வருகிறது. உறையிலிருந்து உருவி எடுத்த வாளைப்போல் ஜொலிக்கிறது. இருண்ட மேகத்தில் பளீரென்று வீசும் மின்னலைப் போல் மின்னுகிறது. நல்ல தமிழில் தெளிவாகவும் அந்தந்தக் கட்டத்துக்கு உரிய உணர்ச்சியுடனும் பேசியிருக்கிறார்கள்.

3. நல்ல 'டெக்னிக்'கைக் கையாண்டு படம் எடுத்திருக்கிறார்கள். படப் பிடிப்பும், ஒலிப் பதிவும் உயர்தரம். நடனக் காட்சிகளில் கண்ணுக்கினிய பின்னணிக் காட்சிகள் அமைந்திருக்கின்றன. ஸ்ரீ கே. ஆர். ராமசாமியின் உணர்ச்சி மிகுந்த நடிப்பின்போது முக பாவங்களைக் காட்டுவதற்கு நவீன உத்திகளைத் திறமையாகக் கையாண்டிருக்கிறார்கள்.

4. ஸ்திரீ-புருஷ விவகாரம் சம்பந்தமான ஆபாசம் எதுவும் இந்தப் படத்தில் கிடையாது. 'ஸெக்ஸ் - அப்பீல்' என்ற பெயரால் மனிதர்களை மிருகங்களாக்கும் சம்பவம்-காட்சி எதுவும் இதில் கிடையாது.

ஆகவே விஷயத்தின் சிறப்பினாலும், நடிப்புத் திறமையினாலும், பேச்சு சாமர்த்தியத்தினாலும், டெக்னிக்கினாலும் படம் சிறந்து விளங்குகிறது.

* * *

இனி, 'வேலைக்காரி' படத்தில் ஆட்சேபகரமானது என்று சொல்லக்கூடிய பகுதியைக் கவனிக்கலாம்.

கதாநாயகன் காளி மாதாவிடம் பக்தி கொண்டிருந்தான். காளி கோயிலுக்குப் போய் வழிபட்டு வந்தான். அவனுடைய சிநேகிதன் மணி அதைக் குறித்து அவனைக் கேலி செய்து வந்தான்.

காளி பூஜையினால் கதாநாயகனுடைய கஷ்டம் தீரவில்லை. அவனுடைய தந்தையின் தற்கொலைக்குக் காரண புருஷனான பணக்கார வேதாசல முதலியாருக்கு ஒரு ஜமீன் கிராமம் கிடைக்கிறது.

இதை அறிந்ததும் கதாநாயகனுடைய மனம் பதறுகிறது. காளி மாதாவிடம் வைத்த பக்தியும் நம்பிக்கையும் மறைந்து விடுகின்றன. "உன்னை வழிபட்டு என்ன பயன்!" என்று அலறிவிட்டு, பூஜை சாமான்களில் சிலவற்றை உதைத்துத் தள்ளிவிட்டுக் கோயிலிலிருந்து வெளியேறுகிறான்.

இதை நாஸ்திகப் பிரசாரம் என்றும், ஹிந்து மதத்துக்கு விரோதமான பிரசாரம் என்றும் சொல்லக்கூடும்.

ஆனால் நாஸ்திகப் பிரசாரம் என்ற முறையில் இந்த முயற்சியை ஒரு பெரும் தோல்வி என்றே நான் கருதுகிறேன்.

கதாநாயகன் காளியைப் பார்த்துக் கேட்பதற்கெல்லாம் ஹிந்து மதம் அறிந்தவர்கள் அனைவருக்கும் பதில் தெரியும்.

"அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்று கொல்லும்."

தெய்வம் கருணை புரிவதும் அப்படியே.

பக்தர்களைத்தான் பகவான் பல விதத்திலும் சோதிப்பார் என்பது ஹிந்துக்கள் அனைவரும் அறிந்ததே. புராண இதிகாசங்களிலும் பக்த விஜயங்களிலும் உள்ள கதைகள் இதையே சொல்கின்றன.

இராமர் பதினாலு வருஷம் வனவாசம் போனார். பஞ்சபாண்டவர்கள் எத்தனையோ கஷ்டப்பட்டார்கள். பிரஹலாதன் இரணியனிடம் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமா? அவ்வளவையும் கடவுள் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கடைசி நேரத்திலேதான் காப்பாற்றுவதற்கு வந்தார்.

ஹிந்து மதம் மட்டும் அல்ல; கிறிஸ்துவ மதமும் அவ்வாறே சொல்கிறது. "கொஞ்சம் உள்ளவர்களிடமிருந்து அந்தக் கொஞ்சமும் எடுத்துக் கொள்ளப்படும். அதிகமாக உள்ளவர்களுக்கு மேலும் கொடுக்கப்படும்" என்பது ஏசுநாதர் திருவாக்கு.

ஹிந்து மத சம்பந்தமான கதைகளில் கடைசியில் பக்தர்கள் வெற்றியடைவது வழக்கம். இந்த "வேலைக்காரி"யிலும் அப்படித்தான் நடைபெறுகிறது.

காளி கோயிலிலிருந்து கதாநாயகன் காளியை வைது கொண்டே ஓடியபோது காளி அவன் சிற்றறிவை எண்ணிச் சிரித்திருக்க வேண்டும்! ஏனெனில் அதே சமயத்தில் காளி அவனுடைய நன்மைக்காக என்ன அற்புதங்களெல்லாம் செய்து வைத்திருக்கிறாள், தெரியுமா?

ஒரு பணக்கார ஸ்திரீயின் மகன் பத்து வருஷம் சீமையிலிருந்துவிட்டுத் திரும்பி வந்தவன், கொலையுண்டு சாக்கில் கட்டப்பட்டுக் கிணற்றில் கிடக்கிறான். அவனுடைய தாயாரோ நம் கதாநாயகனுக்குச் சௌகரியமாக இரண்டு கண்ணும் குருடாகியிருக்கிறாள்! எல்லாம் காளி மாதாவின் கருணைதான்!

குருட்டுத் தாயார் வெகு சுலபமாக வேஷதாரியைத் தன் மகன் என்று நம்பிவிடுகிறாள். யாரை ஏமாற்றினாலும் தாயாரை ஏமாற்ற முடியாது என்று சொல்லலாம். ஆயினும் காளி மாதாவின் கருணையினால் என்ன அதிசயந்தான் நடைபெறாது?

வேதாசல முதலியார் பிள்ளை கொலைக் குற்றத்திலிருந்து தப்பிக்கிறான். அவனை விடுவிப்பதற்கு வடநாட்டு வக்கீலாக வந்த கதாநாயகனை யாரும் கண்டு பிடிக்க முடியவில்லை. இத்தனைக்கும் அவன் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்தவன். அவனை வக்கீலாக "ஜட்ஜ்" ஒப்புக் கொண்டதற்குக் காளியின் கருணையைத் தவிர வேறு என்ன காரணம் சொல்ல முடியும்?

கடைசியில், கதாநாயகன் தான் குருட்டு ஸ்திரீயின் புதல்வன் அல்லவென்று ஒப்புக் கொள்கிறானே? அப்போதாவது ஆள் மாறாட்டத்துக்காக அவனைக் கைது செய்கிறார்களா? குருட்டுப் பணக்காரியின் உண்மை மகனைக் கொன்றது யார் என்று கண்டுபிடிக்கப் பார்க்கிறார்களா? இல்லவே இல்லை! எல்லாம் காளி மாதாவின் கருணைதான்!

கடைசியில் கதை சுபமாகவே முடிகிறது. வேலைக்காரி தன் எஜமானரின் மகனையே மணந்து கொள்ளுகிறாள். கதாநாயகனும் அவன் மனைவியும் சமரசமடைந்து விடுகிறார்கள். எல்லாம் காளியின் கருணைதான்!

காளி பக்தனைப் பரிசோதிக்கும்போது பரிசோதிக்கிறாள். இனிமேல் சோதனையைத் தாங்கமாட்டான் என்று ஏற்பட்டதும் கருணை புரிந்து விடுகிறாள். உடனே நடவாத காரியமெல்லாம் நடந்து விடுகிறது!

இந்தப் படத்தின்மூலம் நாஸ்திகப் பிரசாரம் வெற்றி பெறும் என்று எனக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கை ஏற்படவில்லை.

நம்முடைய ஹிந்து மதம் அத்தகைய தொட்டாற் சுருங்கி மதம் அல்ல. இதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக வலிமையுள்ள எதிர்ப் பிரசாரத்தையெல்லாம் ஹிந்து மதம் வென்று இன்று வரை நிலைத்திருக்கிறது.

ஜனநாயக இந்தியாவில் இத்தகைய அபிப்பிராய சுதந்திரமும் பிரசார சுதந்திரமும் கட்டாயம் அளிக்கப்பட வேண்டும்.

அப்படி அளிப்பதினால் கடவுளுக்காவது ஹிந்து மதத்துக்காவது இந்தியா தேசத்துக்காவது ஒரு தீங்கும் நேரிட்டு விடாது.

உண்மையில் ஹிந்து மதத்துக்குத் தீங்கு விளைக்கக்கூடிய ஸினிமாப் படங்கள் எவை தெரியுமா? "பக்திப் படங்கள்" என்றும் "புராணப் படங்கள்" என்றும் பெயர் சூட்டிக் கொண்டு வரும் ஆபாசம் நிறைந்த படங்களே யாகும். இம்மாதிரி படங்கள் பலவற்றில் நம்முடைய தெய்வங்களை எவ்வளவு கேவலப்படுத்தி ஆபாசங்களுக்கு உட்படுத்தலாமோ அவ்வளவும் செய்வது வழக்கமாயிருந்து வருகிறது. சர்க்கார் தலையிட்டுத் தடுப்பதாயிருந்தால் அத்தகைய ஆபாச புராணப் படங்களையே தடை செய்யவேண்டும்.




## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## சீதாவின் பிரார்த்தனை

கல்கத்தா மெயிலில் இரண்டு தினங்கள் சீதா பிரயாணம் செய்தாள். அந்த இரண்டு நாளும் இரண்டு யுகங்களாகத் தோன்றின. சீதா ஏறியிருந்த அதே மாதர் வண்டியில் கல்கத்தாவுக்குச் செல்லும் இன்னும் சில மதராஸி ஸ்திரீகளும் ஏறியிருந்தார்கள். அந்த ஸ்திரீகளில் ஒருத்தி ஹவ்ராவில் ஜாகை உடையவள். சீதாவுக்கு அவள் சிநேகமானாள். பொழுது போவதற்கு அவளுடைய பேச்சுத் துணை கொஞ்சம் உதவியாயிருந்தது.

வண்டி ஹவ்ரா ஸ்டேஷனை அடைவதற்கு வழக்கத்தைக் காட்டிலும் தாமதமாயிற்று. அன்று காலையிலிருந்து ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஜனங்கள் கூடிக்கூடி ஏதோ கசமுசாவென்று பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த வண்டியிலிருந்த பிரயாணிகளிடையிலும் ஏதோ கிளர்ச்சி ஏற்பட்டிருந்ததாகத் தெரிந்தது. ஆனால் ஸ்திரீகளின் வண்டிக்குத் தகவல் ஒன்றும் எட்டவில்லை.

ஹவ்ராவுக்கு முதல் ஸ்டேஷனில் வேறு வண்டியிலிருந்த தென்னிந்தியர் ஒருவர் இறங்கி வந்து மாதர் வண்டியிலிருந்தவர்களைப் பார்த்து "உங்களுக்கெல்லாம் புருஷத்துணை இருக்கிறதா? அல்லது ஹவ்ரா ஸ்டேஷனுக்காவது புருஷர்கள் வருவார்களா? தனியாகப் போகிறவர்கள் ஜாக்கிரதையாகப் போக வேண்டும். கல்கத்தாவில் ஏதோ கலாட்டாவாம்!" என்று சொன்னார். இது சீதாவின் மனதில் எந்த விதமான கலக்கத்தையும் உண்டு பண்ணவில்லை. வாழ்க்கையில் எத்தனையோ கலாட்டாக்களை அவள் பார்த்தாகி விட்டது. கல்கத்தாவுக்குப் புதிது புதிதாகப் போய் இறங்கிய அன்றைக்கே பெரும் அபாயத்துக்கு அவள் உட்பட நேர்ந்தது. அதையெல்லாம்விட இப்போது என்ன அதிகம் இருந்துவிடப் போகிறது?

ஆனால் ஹவ்ரா ஸ்டேஷனில் போய் இறங்கியவுடனே தான் நினைத்தது எவ்வளவு தவறு என்று சீதாவுக்குத் தெரிந்து விட்டது. அன்று 1946-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 16ந் தேதி. நரகத்தில் வாழும் பேய்கள் அன்றைக்குக் கல்கத்தாவுக்கு விஜயம் செய்து தங்களுடைய நாச வேலைகளை நடத்திக் கொண்டிருந்தன. குழந்தைகள் என்றும், வயோதிகர்கள் என்றும், ஸ்திரீகள் என்றும் பாராமல் அந்தப் பேய்கள் கொன்று தின்று விட்டுப் பயங்கரமாக ஊளையிட்டுக் கொண்டு

அங்குமிங்கும் அலைந்தன. அந்த ஊளைச் சத்தங்களுக்கிடையே 'பாகிஸ்தான் ஜிந்தாபாத்' என்னும் கோஷம் சில சமயம் கேட்டது. திரேதா யுகத்திலே வாழ்ந்த இரணியன் இரணியாட்சன் ஆகிய அரக்கர்களும், திரேதா யுகத்திலே இருந்த இராவணன், கும்பகர்ணன், மகோதரன், விரூபாட்சன் முதலிய ராட்சதர்களும், துவாபர யுகத்திலே பிறந்த கம்ஸன், சிசுபாலன், தந்தவக்கிரன், பகாசுரன், ஜராசந்தன் ஆகிய மனிதப் பேய்களும் ஒரே சமயத்தில் கல்கத்தாவில் வந்து பிறந்து ஆயிரம், பதினாயிரம், லட்சம் எனப் பெருகித் தங்களுடைய கோர கிருத்தியங்களை நடத்தியதாகத் தோன்றியது. ஸ்திரீகளின் வயிற்றில் கத்தியைச் செலுத்திக் குடலை வெளியில் எடுத்தல், குழந்தைகளைக் காலால் பிடித்து வீசி எறிந்து கொல்லுதல், உயிரோடு மனிதர்களைப் பிடித்து எரியும் நெருப்பில் போடுதல்—முதலிய அசுரச் செயல்கள் சர்வ சாதாரணமாயிருந்தன.

**ஹா**வ்ரா ஸ்டேஷனில் சீதா இறங்கியபோது கல்கத்தா நகரத்துக்குள்ளேயிருந்து ஆயிரம் நகரங்களிலிருந்து வருவது போன்ற கோர சத்தம் வருவது கேட்டது. லட்சக்கணக்கான மனிதர்களும் ஸ்திரீகளும் குழந்தைகளும் ஓலமிடும் குரலும், ஆயிரக்கணக்கான பேய் பிசாசுகள் ஊளையிடும் குரலும், வீடுகள் தீயிட்டு எரியும் சத்தமும், எரிந்து விழும் போது எழும் சத்தமும், மக்கள் இங்குமங்கும் ஓடும் சத்தமும், துப்பாக்கி வேட்டுச் சத்தமும், குருப்புக்களின் ஆர்ப்பாட்டச் சத்தமும் சேர்ந்து வந்து ரயிலிலிருந்து இறங்கியவர்களின் உடம்பையும் உடம்புக்குள் இருந்த எலும்பையும் நடுநடுங்கச் செய்தன.

சீதாவுக்கு ரயிலில் சிநேகமான ஸ்திரீயை அழைத்துப் போவதற்காக மனுஷர்கள் வந்திருந்தார்கள். கல்கத்தாவில் பயங்கரமான கலகம் நடப்பதாகவும், ஆகையால் யாரும் ஹாவ்ரா பாலத்தைத் தாண்டி அப்பாலே போக முடியாது என்றும் சொன்னார்கள். அந்த ஸ்திரீ தனியாக வந்திருந்த சீதாவைப் பற்றி அவர்களிடம் சொன்னாள். சீதாவும் ஹாவ்ராவுக்கு வந்து இருக்கலாம் என்றும் கலகம் அடங்கிய பிறகு அவளுடைய மனுஷர்கள் இருக்கும் இடத்தைத் தெரிந்துகொண்டு போகலாம் என்றும் சொன்னார்கள். இதைக் கேட்ட சீதாவுக்கு உள்ளம் கலங்கி உலகம் சுற்றியது. சிறிது நிதானித்துக் கொண்டு, "இல்லை; நான் எப்படியும் இன்றைக்குப் போகவேண்டும். எனக்கு ஒன்றும் வராது!" என்றாள். "அப்படியானால் போய்ப் பாருங்கள்!" என்றனர் ஹாவ்ராக்காரர்கள். சீதா தட்டுத்தடுமாறி ஹாவ்ரா ஸ்டேஷனிலிருந்து கொஞ்ச தூரத்திலிருந்த பாலம் வரையில் சென்றாள். அங்கிருந்து ஸ்டேஷன் பக்கம் ஓடிவந்த ஒரு பெரும் கூட்டம் அவளைத் தள்ளிக் கொண்டு வந்து ஸ்டேஷன் வாசலில் சேர்த்தது. அது வரை காத்திருந்த ஹாவ்ராக்காரர்கள் அவளையும் சேர்த்துத் தங்களுடன் அழைத்துக்கொண்டு போனார்கள்.

ஹாவ்ராவில் தங்கியிருந்த நாலு தினங்களும் சீதா அநுபவித்த மன வேதனையைச் சொல்லி முடியாது. இன்னும் ஒரு நாள் முன்னால் வராமற் போனோமே. வந்திருந்தால் இத்தகைய பயங்கரமான அபாயகாலத்தில் கணவனோடும் குழந்தையோடும் சேர்ந்திருக்கலாமே என்று எண்ணி ஏங்கினாள். ஒவ்வொரு நிமிஷமும் கணவனுக்கு என்ன நேர்ந்ததோ, குழந்தைக்கு என்ன நேர்ந்ததோ என்று நினைத்து விம்மினாள். இவ்வளவு தூரம் வந்த பிறகு கடைசியில் அவர்களைப் பார்க்க முடியாமலே போய்விடுமோ என்று எண்ணியபோது அவளுடைய நெஞ்சை வாளால் அறுப்பது போலிருந்தது. கல்கத்தாவில் நடக்கும் சம்பவங்களைப் பற்றிக் கொஞ்ச நேரத்துக்கு ஒருதடவை வந்துகொண்டிருந்த செய்திகள் அவளுடைய மனப் புண்ணில் அடிக்கடி கொள்ளிக் கட்டையால் சுடுவது போன்ற துன்பத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன. முக்கியமாக, பச்சிளங் குழந்தைகளைத் தூக்கி எறிந்து கொல்லுகிறார்கள் என்றும் தீயிலே போட்டு வதைக்கிறார்களென்றும் வந்த செய்திகள் அவளுக்கு எல்லையில்லாத துன்பத்தை உண்டு பண்ணின. அந்த மாதிரி கதி தன் அருமைக் குழந்தைக்கு ஒருவேளை நேர்ந்திருக்குமோ, நேர்ந்துவிடுமோ என்று எண்ணி எண்ணி அவளுடைய

மண்டை வெடித்துவிடும் போலிருந்தது. இந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைத்தால் இனி என்றைக்கும் எந்தக் காரணத்தைக் கொண்டும் குழந்தையை விட்டுப் பிரிவதில்லை யென்று மனதிற்குள் ஆயிரந்தடவை சபதம் செய்து கொண்டாள். இக்கத் தடவை தன் கணவன் உயர் பிழைத்திருந்து தனக்கும் அவருக்கும் சமாதானமாகி விட்டால் அப்புறம் எந்தக் காரணத்தைக் கொண்டும் அவருடன் சண்டையிடுவதில்லை யென்றும் பிரதிக்ஞை செய்து கொண்டாள். ஆனால் அவர் தன்னை ஏற்றுக் கொள்ள வேண்டுமே? தன்னைக் கண்டதும் "எங்கே வந்தாய்? ஏன் வந்தாய்?" என்று கேட்காமலிருக்கவேண்டுமே? அப்படி அவர் கேட்டாலும் கேட்கட்டும். அதற்காகத்தான் இனிமேல் பின்வாங்கப் போவதில்லை. ஏதாவது எப்படியாவது சொல்லிச் சமாதானம் செய்துகொள்ள வேண்டியதுதான். ஆனால் அவர் பிழைத்திருக்க வேண்டுமே? அவருக்கும் குழந்தைக்கும் அபாயம் ஒன்றும் நேராமல் இருக்க வேண்டுமே? இந்தப் பாவியின் அதிர்ஷ்டம் எப்படி யிருக்குமோ, தெரியவில்லையே?

மூன்று நாள் பகலும் இரவும் சீதா தூங்கவே யில்லை. தப்பித் தவறிச் சிறிது கண்ணயர்ந்தாலும் பயங்கர சொப்பனங்கள் கண்டு திடுக்கிட்டு எழுந்தாள். அவள் படும் துன்பத்தைப் பார்த்து அந்த வீட்டுக்காரர்கள் அவளிடம் மிகவும் அநுதாபம் காட்டி ஆறுதல் கூறினார்கள்.

ஹாவ்ராவில் வசித்த தென்னிந்தியர்களுக்குக் கவலையில்லாமற் போகவில்லை. கல்கத்தாவில் நடக்கும் பயங்கரக் கலகம் பாலத்தைத் தாண்டி ஹாவ்ராவுக்குள்ளும் வராது என்பது என்ன நிச்சயம்? இது மட்டுமல்ல. அவர்களிலே பலர் உத்தியோகம் பார்த்த ஆபீஸுகள் கல்கத்தாவிலேதான் இருந்தன. அந்த ஆபீஸுகளின் கதி என்ன ஆகிறதோ? கலகம் அடங்கிய பிறகாவது ஆபீஸைத் திறப்பார்களோ, என்னமோ? அப்படித் திறந்தால்தான் என்ன? ஷுஹராவர்த்தி ஆட்சி புரியும் நகரத்தில் இனி நிம்மதியாக வாழ முடியுமா?

இவ்வாறெல்லாம் முதல் இரண்டு நாளும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தவர்கள் கலகம் ஆரம்பித்த மூன்றும் நாளிலிருந்து கொஞ்சம் உற்சாகம் காட்ட ஆரம்பித்தார்கள். ஏனெனில் கலகத்தின் போக்கு மூன்றும் நாளிலிருந்து கொஞ்சம் மாறத் தொடங்கியது. முதல் இரண்டு நாளும் ஹிந்துக்களின் படுகொலையாகவே நடந்தது. மூன்றும் நாள் பீஹாரிலிருந்து கல்கத்தாவுக்கு வந்து குடியேறியிருந்த பால்கார முண்டர்களும் சீக்கியர்களும் தங்கள் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்தார்கள். பழிக்குப் பழி வாங்கும் கோஷம் எங்கெங்கும் கிளம்பியது. முதல் இரண்டு நாளும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஷுஹராவர்த்தியும் அவருடைய சகாக்களும் இப்போது கலவரத்தை அடக்கவும் கல்கத்தாவின் நல்ல பெயரை நிலை நாட்டவும் பெருமுயற்சி செய்தார்கள். ஐந்தாம் நாள் அவர்களுடைய முயற்சி பலன் தந்தது. கலவரம் அடங்கியது.

* * *

சீதா ஹாவ்ரா ஸ்டேஷனில் வந்திறங்கி ஒரு வாரம் சொல்ல முடியாத மனவேதனைகளை அநுபவித்த பிறகு எட்டாம் நாள் அமரநாத்தின் வீட்டை அடைந்தாள். அமரநாத்தின் வீட்டுக்கு எதிர் வீட்டில்தான் அவளுடைய கணவனும் குழந்தையும் வசித்தார்கள் என்று சித்ராவின் கடிதத்திலிருந்து அவளுக்குத் தெரிந்திருந்த தல்லவா? ஆனால் இப்போது ராகவனும் வஸந்தியும் எதிர் வீட்டில் இல்லை, அமரநாத்தின் வீட்டிலேயே மேல் மச்சில் இருந்தார்கள் என்று தெரிந்தது. அவர்கள் மட்டுமா? புருஷர்களும் ஸ்திரீகளும் குழந்தைகளுமாகத் தென்னிந்தியர்கள் சுமார் நூறு பேர் அந்த வீட்டில் இருந்தார்கள். கலகம் நடந்த பிரதேசங்களிலிருந்து தப்பிப் பிழைத்து வந்தவர்கள்தான் அத்தனை பேரும். அவர்களில் பெரும்பாலோரை அபாயங்களிலிருந்து தப்புவித்து அழைத்துக் கொண்டு வந்து சேர்த்தது தன் கணவன் சௌந்தரராகவன்தான் என்பதை அறிந்தபோது சீதாவின் உள்ளம் பூரித்தது. அப்போதுதான் பக்கத்திலிருந்து அவருக்கு உதவி செய்யக் கொடுத்து வைக்கவில்லையே என்ற ஏக்கமும்கூட ஏற்பட்டது.

சௌந்தரராகவன் செய்த சேவையைப் பற்றியும் அமரநாத்தின் வீடு

தென்னிந்தியர்களின் அடைக்கலம் ஆனது பற்றியும் ஹாவ்ராவிலேயே சீதா தெரிந்து கொண்டிருந்தாள். ஆகையால் நேரே அமரநாத் வீட்டுக்குச் சென்று சித்ராவைத் தேடிப் பிடித்தாள். சித்ரா சீதாவைப் பார்த்ததும், "வந்தாயா, மகராஜீ! ஏதோ இந்த மட்டும் இப்போதாவது வந்து சேர்ந்தாயே? உன் புருஷனுக்கு, நீயாச்சு! மேல்மாடியில் படுத்துக் கிடக்கிறார்! போய்க் கவனித்துக்கொள்!" என்றாள். சீதா நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள, "அவருக்கு என்ன? ஏன் படுத்திருக்கிறார்?" என்று கேட்டாள். "அவருக்கு என்னவா? 105 டிக்ரி காய்ச்சல், ஜன்னி, பிதற்றல் எல்லாந்தான்! இந்த ஏழு நாளும் அவர் செய்திருக்கிற வேலைக்கு சுரம் வந்திருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. சுரம் தெளியாமல் அவர் செத்துப்போனாற்கூடப் பரவாயில்லை. நூறு பேரைக் காப்பாற்றிய மனுஷன் அப்புறம் இருந்தால் என்ன? போனால் என்ன?" என்றாள் சித்ரா. கல்கத்தா படுகொலையின்போது அந்த நகரில் வசித்தவர்கள் சாவைப் பற்றி இப்படி அலட்சியமாய்ப் பேசுவது இயற்கையேயல்லவா? ஆனால் சீதா அப்படி நினைக்கவில்லை. "சித்ரா! உனக்குப் புண்ணியம் உண்டு. இப்படியெல்லாம் பேசாதே! நிஜமாக அவருக்கு அபாயம் ஒன்றும் இல்லையல்லவா? பிழைத்துக் கொள்ளுவார் அல்லவா?" என்று கேட்டாள்.

"அது உன்னுடைய சமர்த்து; உன் பெண்ணின் சமர்த்து. நீங்கள் இரண்டு பேரும் செய்கிற சிசுருஷையில் இருக்கிறது அவர் பிழைக்கிறது. டாக்டர் அப்படித்தான் சொல்கிறார். உன் பெண் வஸந்தி இருக்கிறாளே? மகா சமர்த்து. இந்த ஏழு நாளும் எப்படி எனக்கு ஒத்தாசையாயிருந்தாள் என்று நினைக்கிறாய்? கொஞ்சமாவது பயப்பட வேண்டுமே? கிடையாது! எல்லாரும் குலை நடுங்கிக் கொண்டிருந்தபோது அவள் மட்டும் கொஞ்சங்கூடப் பயமில்லாமல் உற்சாகமாகப் பேசிக்கொண்டும் குஷிப் படுத்துக்கொண்டும் இருந்தாள். இப்பேர்ப்பட்ட புருஷனையும் பெண்ணையும் விட்டுவிட்டுத் தேவபட்டணத்தில் உனக்கு என்னடி வைத்திருந்தது? போனால் போகட்டும். உடனே இப்போதாவது போய்க் கவனி. வஸந்திக்குக் கை வலித்துப் போயிருக்கும் ஐஸ் வைத்து வைத்து! ஆனாலும் குழந்தை அலுக்காமல் சலிக்காமல் முணு முணுக்காமல் அப்பாவுக்குச் சிசுருஷை செய்து கொண்டிருக்கிறாள். இந்த வீட்டுக்கு வந்திருக்கும் நூறு பேரைப் பார்த்துக்கொள்வதும் சரி, உன் புருஷன் ஒருவருக்குச் சிசுருஷை செய்வதும் சரி. வேலை செய்தாலும் அப்படி வேலை செய்கிறார்; சுரமாய்ப் படுத்தாலும் அப்படிப் படுத்துவிட்டார். போ மச்சுக்கு!......" என்று இன்னும் ஏதோ சொல்லிக்கொண்டே சித்ரா விரைந்து போய்விட்டாள். சீதா கவலையும் ஆவலும் முன்னால் தள்ளவும் கூச்சமும் தயக்கமும் பின்னால் பிடித்து இழுக்கவும் தட்டுத் தடுமாறி மச்சுக்குப் போய்ச் சேர்ந்தாள். அங்கேயும் ஒரே ஜனக்கூட்டமும் சந்தடியுமாக இருந்தது. ஆனால் ஒருவரும் சீதாவைக் கவனிக்கவில்லை. அவரவர்கள் தங்கள் தங்களுடைய சொந்த விசாரத்தில் மூழ்கிக் கிடந்தார்கள்.

மேல்மாடியில் சந்தடியில்லாத அறை ஒன்றே ஒன்று இருந்தது. அதில்தான் ராகவன் இருக்கவேண்டும் என்று எண்ணிச் சீதா வெறுமனே சாத்தியிருந்த கதவை மெதுவாகத் திறந்தாள். அவள் நினைத்தபடிதான் இருந்தது. அந்த அறையில் போட்டிருந்த கட்டிலில் ராகவன் படுத்திருந்தான். அவனுடைய கண்கள் மூடியிருந்தன. உணர்ச்சியில்லாத நிலையில் ஏதோ முனகிக் கொண்டிருந்தான். தலைமாட்டில் வஸந்தி உட்கார்ந்து அப்பாவின் தலையிலும் நெற்றியிலும் ஐஸ்ஸை வைத்துக்கொண்டிருந்தாள்.

கதவைத் திறந்துகொண்டு சீதா உள்ளே நுழைந்ததும் வஸந்தி குனிந்திருந்த முகத்தைத் தூக்கி அவளை நிமிர்ந்து பார்த்தாள். சொல்ல முடியாத ஆவலும் வியப்பும் அன்பும் ஆத்திரமும் இரக்கமும் கோபமும் அவளுடைய கண்ணின் பார்வையில் கலந்திருந்தன. அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வரவில்லை.

சீதாவுக்கும் பேச நா எழவில்லை. தயங்கித் தயங்கிக் கட்டிலண்டை போனாள். ராகவனுடைய உள்ளங்காலை இலேசாகத் தொட்டாள்; ஜில்




லென்று இருந்தது. பிறகு இன்னும் சிறிது நகர்ந்து உள்ளங் கைகளைத் தொட்டுப் பார்த்தான். கைகளும் ஜில்லென்று இருந்தன. மேலும் சிறிது நெருங்கிக் கழுத்தின் கீழே மார்பில் கையை வைத்துத் தொட்டுப் பார்த்தான். அடுப்பில் போட்ட இருப்புச் சட்டியைப்போல் கொதித்தது. சுரம் ரொம்ப அதிகமாயிருக்கிறது என்று ஐயமின்றித் தெரிந்தது. இதற்கிடையில் வஸந்தி அம்மா முகத்தையும் அப்பா முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். சீதா வஸந்தியைச் சந்தித்ததும் என்னவெல்லாமோ சொல்ல வேணும் என்று நினைத்திருந்தாள். "என்னைப் பார்க்க வராமல் உன் அப்பாவுடன் போய் விட்டாய் அல்லவா? நீ எனக்குப் பெண் இல்லை!" என்று சொல்வதாகக் கூட உத்தேசித்திருந்தாள். அதற்கெல்லாம் இப்போது சந்தர்ப்பமில்லாமலும் வசதி இல்லாமலும் போயிற்று.

"வஸந்தி! ஐஸ் பையைச் சற்று என்னிடம் கொடு! உனக்குக் கையை வலிக்குமே?" என்றாள் சீதா.

"வேண்டாம், அம்மா! எனக்குக் கை வலிக்கவில்லை. உனக்கு ஐஸ் பை சரியாக வைக்கத் தெரியாது. நெற்றி முழுதும் படும்படி வைக்க வேண்டும்" என்றாள் வஸந்தி.

"எனக்குத் தெரியுமடி, கண்ணே! தெரியாமற் போனால் நீதான் பக்கத்தில் இருக்கிறாயே, சொல்லிக் கொடு!" என்றாள் சீதா.

அவ்வாறே வஸந்தி தன் பக்கத்தில் இருக்க, சீதா ஐஸ் பையை ராகவனுடைய நெற்றியில் வைத்துக் கொண்டிருந்தாள். தாயாரும் பெண்ணும் கொஞ்ச நேரம் ஒருவரையொருவர் பார்ப்பதோடு இருந்தார்கள். வஸந்தியின் முகத்தில் சிறிது நேரத்துக்குப் பிறகு புன்னகை மலர்ந்தது.

"அம்மா! நீ இனிமேல் என்னையும் அப்பாவையும் விட்டுவிட்டுப் போகவே மாட்டாயே?" என்றாள்.

சீதாவின் முகமும் சிறிது மலர்ச்சி அடைந்தது. "போகமாட்டேனடி, கண்ணே! முன்னே கூட நான் வேண்டுமென்றா போனேன்? வேறு வழியில்லாமல் போனேன். அப்பாவும் நீயும் என்னை அழைத்துக் கொள்ளாமல் இங்கே வந்து விட்டீர்கள்!" என்றாள்.

"அது போனால் போகட்டும், அம்மா! இனிமேல் நீ எங்களை விட்டு விட்டுப் போகமாட்டாயே?'

"போக மாட்டேன்."

"ஐந்தாறு நாளாக இந்த ஊரிலே கலகம் பலமாக நடந்தது. கல்கத்தா நகரிலே உள்ளவர்கள் அவ்வளவு பேரும் கூண்டோடு கைலாசமாய்ச் செத்துப் போக வேண்டியதுதான் என்று சொல்லிக் கொண்டார்கள். அப்போது என்ன தோன்றிற்று தெரியுமா? சொல், பார்க்கலாம்!"

"தெரியவில்லை, கண்ணே! நீதான் சொல்ல வேண்டும்."

"சாகிறதற்கு முன்னால் உன்னை ஒரு தடவை பார்க்காமல் செத்துப் போக வேண்டியிருக்கிறதே என்று தோன்றியது. அப்படிச் செத்துப் போய்விட்டால் கூட ஆவி ரூபத்தில் நீ இருக்குமிடம் வந்து உன்னை ஒரு தடவை பார்த்து விட்டுப் போக வேண்டும் என்று தோன்றியது."

"அப்படி யெல்லாம் சொல்லாதே, வஸந்தி! நல்ல பேச்சாகப் பேசு!"

"சாவு என்றால் உனக்கு என்னமோ போல் இருக்கிறதாக்கும். இங்கே ஏழு எட்டு நாளாய் ஓயாமல் சாவைப் பற்றித்தான் பேச்சு. அது எங்களுக்குச் சகஜமாய்ப் போச்சு, அம்மா!"

"அது இருக்கட்டும், குழந்தை! அப்பாவின் உடம்பைப் பற்றி டாக்டர்கள் என்ன சொன்னார்கள்? என்ன சுரம் என்றார்கள்?"

"'ஷாக்'கினால் வந்த ஜுரம் என்றுதான் சொன்னார்கள். 'ரொம்பக் கடுமையாகத்தான் வந்திருக்கிறது; ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்றார்கள். ஆனால் எனக்கென்னமோ ஒரு அசட்டுத் தைரியம், அப்பா கட்டாயம் பிழைத்துவிடுவார் என்று. ஏழு நாளாக எத்தனை கண்டத்துக்கு அவர் தப்பிப் பிழைத்திருக்கிறார் தெரியுமா?"

"அப்பா செய்ததைப் பற்றி எல்லாரும் சொல்கிறார்களே! அப்படி என்ன செய்தார், வஸந்தி!"

"அப்பா செய்ததை யெல்லாம் சொல்வதா யிருந்தால் ஒரு ராமாயணமும் பாரதமும் எழுத வேண்டும், அம்மா! அவ்வளவு செய்திருக்கிறார். ஒன்று சொல்கிறேன் கேள். ஒரு வீட்டைக் கலகக்காரர்கள் சூழ்ந்து கொண்டு கதவைத் திறக்காவிட்டால் வீட்டுக்கு நெருப்பு வைத்து விடுவதாகப் பயமுறுத்திக்கொண்டிருந்தார்களாம். இது தெரிந்ததும் அப்பா என்ன செய்தார் தெரியுமா? கவர்ன்மெண்ட் ஆபீஸரை டெலிபோனில் கூப்பிட்டு ஒரு முஸ்லிம் வீட்டை ஹிந்துக்கள் தாக்குவதாகச் சொன்னார். அப்படிச் சொன்னால்தான் கவர்ன்மெண்டார் போலீஸை அனுப்புவார்கள் என்று. போலீஸூம் வந்தது. அவர்களை அழைத்துக்கொண்டு அப்பாவே நேரில் போய் அந்த வீட்டிலிருந்தவர்களை மீட்டுக்கொண்டு வந்தார். இது தெரிந்தவுடனே கலகக்காரர்கள் அப்பாவை அடையாளம் வைத்துக்கொண்டு அவரைக் கொன்று விடப் பார்த்தார்கள். ஆனால் அவர்களுடைய ஜம்பம் சாயவில்லை......"

இந்தச் சமயத்தில் சௌந்தரராகவன் வெறி வந்தவன்போல் பிதற்றத் தொடங்கினான். "ஓகோ! என்னை யார் என்று நினைத்தீர்கள்! கிட்ட வந்தால் சுட்டுப் பொசுக்கி விடுவேன். கத்திக்குக் கத்தி, துப்பாக்கிக்குத் துப்பாக்கி, கொலைக்குக் கொலை, பழிக்குப் பழி! தெரியுமா? என்னையும் மகாத்மா காந்தி என்று எண்ணிவிடாதீர்கள்!" என்று கூச்சல் போட்டுக்கொண்டே எழுந்து உட்கார முயன்றான். சீதாவும் வஸந்தியும் அவனை மெதுவாகப் பிடித்து மறுபடியும் படுக்க வைத்தார்கள். அப்போது ராகவன் சீதாவை விழித்துப் பார்த்தான். ஆனால் அவள் யார் என்று கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. படுக்கையில் படுத்துக் கண்ணை மூடிக் கொண்டு விட்டான்.

அப்போது சீதா தன் மனதிற்குள் வேண்டிக்கொண்டாள் :— "சுவாமி! பகவானே! இவர் ஒரு வேளை இந்தச் சுரத்தில் இறந்து போவதா யிருந்தாலும் ஒரே ஒரு தடவையாவது என்னைப் பார்த்து இன்னார் என்று தெரிந்து கொள்ளட்டும். நான் வந்து விட்டேன், இவருக்குச் சிசுரூஷை செய்கிறேன் என்பதை அறிந்து கொள்ளட்டும். கடவுளே! இந்த ஒரு வரமாவது எனக்குத் தர வேண்டும்!"

இவ்விதம் மனப்பூர்வமாக மன்றாடிப் பிரார்த்தித்தாள் சீதா. ஆனால் அவள் பயந்ததுபோல் ஒன்றும் நடந்து விடவில்லை. ராகவனுக்கு நாளுக்கு நாள் உடம்பு குணமாகி வந்தது. நாளுக்கு நாள் அறிவும் தெளிவடைந்து வந்தது.

Stanes

தெற்கே பயிரிடப்படும்

ஸ்டேன்ஸ்

தேயிலையும் காப்பியும்

எங்கேயும் கிடைக்கும்



STC 1518




லண்டன் பி. பி. ஸி. ரேடியோ ஸ்தாபனத்தின் பிரம்மாண்டமான கட்டடம்.

ஹிட்லர் தம்மிடம் ஓர் இரகசிய ஆயுதம் இருப்பதாக அடிக்கடி கூறியது உண்டு.

"அது என்ன ஆயுதம்? எப்போது அது உபயோகிக்கப்படும்?" என்பதை உலகம் பயத்துடனும் ஆவலுடனும் எதிர்பார்த்தது.

ஆனால் அந்த இரகசிய ஆயுதம் உபயோகிக்கப்படவே இல்லை; அது என்னவென்பதும் யாருக்கும் தெரியாமல் போய்விட்டது.

ஒருவேளை அப்படி ஒரு ஆயுதம் இல்லையோ, அது ஹிட்லருடைய மனப்பிராந்தி தானோ—தெரியாது.

ஆனால் ஹிட்லரிடம் வேறு ஒரு பயங்கரமான ஆயுதம்—டாங்குகளையும் விமானங்களையும் ஹவிட்ஸார் பீரங்கிகளையும் வி-8 குண்டுகளையும் விட ஒரு பயங்கரமான ஆயுதம் இருந்தது. அதுதான் பிரசார பீரங்கி.

சென்ற உலக மகாயுத்தத்தின்போது கடலிலும் நிலத்திலும் வானத்திலும் நடத்திய போர்களை யெல்லாம்விட ஜெர்மனி நடத்திய பிரசாரப் போர்தான் மிகவும் முக்கியமானது.

இதைப்பற்றி வேடிக்கையாக ஒரு கதை சொல்லுவது உண்டு.

ஹானிபால், ஸீஸர், நெப்போலியன் ஆகிய மூவரும் மேலுலகத்தில் இருந்தபடி இரண்டாவது உலக மகாயுத்தத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்களாம். அப்போது ஹானிபால், "ஹா, அந்த டாங்குகள் மாத்திரம் என்னிடம் இருந்திருந்தால் ரோம் நகரத்தையே தவிடு பொடியாக்கி யிருப்பேனே!" என்று வருத்தப்பட்டாராம். ஸீஸர் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "அடாடா, அந்த அமெரிக்க லிபரேட்டர் விமானங்கள் மாத்திரம் என்னிடம் இருந்திருந்தால், எத்தனை நாடுகளை ஜயித்திருப்பேன்!" என்று கவலைப் பட்டாராம். நெப்போலியன் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்துவிட்டு, "ஹூம், அந்த கோயபெல்ஸ் மாத்திரம் என்னிடம் இருந்திருந்தால், நான் யுத்தத்தில் தோற்றுப் போனதாகவே உலகத்துக்குத் தெரிந்திருக்காதே!" என்று பச்சாதாபப்பட்டாராம்.

யுத்தத்தில் பிரசாரத்துக்கு எவ்வளவு சக்தி உண்டு என்பதை இது நன்கு விளக்குகிறது.

இது பிரசார யுகம். அப்பளாம் முதல் விளக்கெண்ணெய் வரை எல்லாம் பிரசாரத்தின் மூலம் விற்கப்படுகிறது.

பெரிய பெரிய கம்பெனிகளும் வர்த்தக ஸ்தலங்களும் கூட பிரசாரத்தையே பெரிதும் நம்பி யிருக்கின்றன.

தனி மனிதர்களுக்கும் வர்த்தக நிலையங்களுக்கும் பிரசாரம் அவசியமா யிருப்பது போல ஒவ்வொரு தேசத்துக்கும் இப்போது

பிரசாரம் இன்றியமையாத தாகிவிட்டது. தன்னைப்பற்றி மற்ற நாடுகளுக்கு எடுத்துச் சொல்லி உலகத்தின் நல்ல அபிப்பிராயத்தைப் பெற ஒவ்வொரு நாடும் ஆசைப்படுகிறது. அதற்கு அவை பிரசாரத்தைக் கையாளுகின்றன. அப்படி பிரசாரத்தைக் கையாளும் முக்கியமான நாடுகளில் ஒன்று பிரிட்டன்; மற்றொன்று ருஷ்யா.

## பிரிட்டிஷ் பிரசாரம்

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் பிரிட்டன் அளவு கடந்த கஷ்ட நஷ்டம் அடைந்து விட்டது. அதனுடைய பொருளாதாரம் சீர் குலைந்து விட்டது. இப்போது தான் அது கொஞ்சம் கொஞ்சமாகத் தலை தூக்கி முன்னுக்கு வருகிறது. அப்படியிருந்தும்கூட 1947-ம் வருஷம் பிரிட்டன் பிரசாரத்துக்கு எவ்வளவு பணம் செலவிட்டிருக்கிறது, பாருங்கள்!

மத்திய விளம்பரக் காரியாலயம் 16,536,000 டாலர்

வெளிநாட்டிலாக்கா
செய்தி ஸ்தாபனம் 8,520,000 டாலர்

பி. பி. ஸி. ஸ்தாபனத்துக்கு
(நன்கொடை) 18,000,000 டாலர்

பிரிட்டிஷ் கௌன்சில்
பிரசார ஸ்தாபனம் 14,000,000 டாலர்

மொத்தம் 570,56,000 டாலர்

ஏறக்குறைய ஐந்து கோடியே எழுபது லட்சம் டாலர் (பதினெட்டு கோடி ரூபாய்) செலவு செய்திருக்கிறது—ஒரு வருஷத்தில்!

இவ்வளவும் பகிரங்கமாகப் பட்ஜெட்டில் காட்டிச் செய்யும் பிரசாரச் செலவுகள். இவற்றைத் தவிர, கணக்குக் காட்டாமல் இரகசியப் பிரசாரத்துக்காக ஏராளமான பணம் செலவு செய்யப்படுகிறது.

1918-ம் வருஷம், அதாவது முதல் உலக மகா யுத்தம் முடியப் போகும் சமயம் பிரபல பிரிட்டிஷ் பத்திரிகை முதலாளியான லார்ட் நார்த்புருக் தலைமையில் பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு பிரசார ஸ்தாபனத்தை அமைத்தது. அவர் வெகு திறமையாகத்தான் பிரசாரத்தை நடத்தி வந்தார். ஆனால் யுத்தம் முடிந்ததும் அந்த ஸ்தாபனம் கலைக்கப்பட்டு விட்டது.

ஜெர்மனி ஹிட்லர் ஆட்சிக்குக் கீழ் வந்தது; அவர் நாஜி பிரசார இயந்திரத்தை முடுக்கி விட்டார். இத்தாலி முஸோலினியின் ஆட்சிக்குக் கீழ் வந்தது. அவர் பாஸிஸ்ட் பிரசார இயந்திரத்தை முடுக்கி விட்டார். இரண்டும் பிரிட்டன் மீது பிரசாரத் தீயைக் கக்கின. பிரிட்டன் யோசித்தது. பலமான ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி நாஜி - பாஸிஸ்ட் பிரசாரத்தை எதிர்க்காவிட்டால் உலகம் தனக்கு முட்டாள் பட்டம் கட்டும் என்பதை உணர்ந்தது. அவ்வளவுதான்; பிரிட்டிஷ் கௌன்சில் என்ற ஸ்தாபனம் உருவாயிற்று. வெளிநாட்டு இலாக்காவைச் சேர்ந்த செய்தி ஸ்தாபனம் விரிவாக்கப்பட்டது. பி. பி. ஸி. என்ற பிரிட்டிஷ் ரேடியோ ஸ்தாபனம் ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ், ஈராக், ஈரான், எகிப்து முதலிய நாடுகளுக்குச் செய்திகளை ஒலி பரப்பத் தொடங்கியது. இரண்டாவது உலக மகாயுத்தம் ஆரம்பமான போது, பிரிட்டிஷ் பிரசாரம் பூரண சக்தி பெற்று, நாஜி ஜெர்மனியையும் பாஸிஸ்ட் இத்தாலியையும் எதிர்க்கும் போராட்டத்தில் பிரிட்டனுக்கு இணையற்ற ஓர் ஆயுதமாக விளங்கியது.

இரகசியப் பிரசாரம் செய்வதில் பிரிட்டன் ஜெர்மனியையும் தோற்கடித்து விட்டது.

1942-ம் வருஷம். யுத்தம் கடுமையாக நடந்து கொண்டிருந்த சமயம். அப்போது ஜெர்மனியில் ஹிட்லருக்கு விரோதமாக ஒரு ஒலி பரப்பு நடந்து வந்தது. அது ஹிட்ல

மாஸ்கோ ரேடியோ நிலைய இயந்திர அறையின் ஒரு பகுதி



ரையும் ஜெர்மன் ராணுவத் தலைவர்களையும் கடுமையாகத் தாக்கிக் கேலி செய்து வந்தது. அந்த இரகசிய ஒலிபரப்பைக் கேட்டு ஹிட்லருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ‘ நம்முடைய நாட்டிலேயே நமக்கு விரோதமாக இப்படி யார் ஒலி பரப்புவது?" என்று அவர் சீறிப் பொங்கினார். அந்த ஒலி பரப்பை நடத்துவது யார் என்பதைக் கண்டு பிடிப்பதற்காக ஜெர்மன் இரகசியப் போலீஸ் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தது. முடியவில்லை. அந்த ஆசாமி, ஜெர்மனியில் இருந்தால்தானே! அவர் பத்திரமாக பிரிட்டனில் இருந்து கொண்டே அந்த ஒலி பரப்பை நடத்தி வந்தார். அவர்தான் பிரசித்தி பெற்ற பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர் செப்டன் டெல்மர்.

இந்த மாதிரி ஒன்று இரண்டு அல்ல, எத்தனையோ இரகசிய ஒலி பரப்புகளை பிரிட்டன் நடத்தி வந்தது.

பிரிட்டிஷ் பிரசாரத்தை எப்படி நடத்த வேண்டும், அதன் கொள்கை எப்படி இருக்க வேண்டும் என்பதை பிரிட்டிஷ் மந்திரி சபைக் கமிட்டி முடிவு செய்கிறது. இந்தக் கமிட்டிக்கு, தற்போது பிரிட்டிஷ் உள்நாட்டு மந்திரியா யிருக்கும் ஹெர்பர்ட் மாரிஸன்தான் தலைவர்.

பிரிட்டிஷ் உள்நாட்டுப் பிரசாரத்தை மத்திய விளம்பர காரியாலயம் (Central Office of information) நடத்துகிறது. இது தொழிற்கட்சி சர்க்கார் பதவிக்கு வந்த பிறகு ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனம். கன்ஸர்வேடிவ் கட்சிக்காரர்களுக்கு இந்த ஸ்தாபனத்தைக் கண்டால் பிடிப்பதே இல்லை. தொழிற்கட்சிக்காரர்கள் தங்களுக்குப் பலம் தேடிக் கொள்வதற்காகத்தான் இந்த ஸ்தாபனத்தை அமைத்திருப்பதாக அவர்கள் குற்றம் சாட்டுகிறார்கள்.

ஏறக்குறைய இரண்டாயிரம் பேர் இந்த ஸ்தாபனத்தில் வேலை செய்து வருகிறார்கள்.

உள்நாட்டுப் பிரசாரத்தைக் காட்டிலும் வெளிநாட்டுப் பிரசாரத்தில்தான் பிரிட்டன் அதிக கவனம் செலுத்துகிறது. வெளிநாட்டுப் பிரசாரத்தில் அது உலகத்தில் உள்ள மற்ற எல்லா நாடுகளையும்விட முன்னணியில் நிற்கிறது. லட்சக் கணக்கான பவுன்களைக் கொட்டுகிறது.

வெளிநாட்டுப் பிரசாரம் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி காரியாலயத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. வெளிநாட்டுப் பிரசார ஸ்தாபனத்தில் பத்து இலாகாக்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை:—

(1) அமெரிக்க இலாக்கா. (2) கிழக்கு ஐரோப்பிய இலாக்கா. (3) தூரக் கிழக்கு இலாக்கா. (4) மேற்கு ஐரோப்பிய இலாக்கா.

இவை ஒவ்வொன்றும் அந்தந்தப் பகுதியில் பிரசாரத்தை நடத்தி வருகின்றன.

வெளிநாட்டுப் பிரசார இலாக்காவில் 1948-ம் வருஷக் கணக்குப்படி 2,323 பேர் வேலை செய்து வருகிறார்கள்.

இந்த வெளிநாட்டுப் பிரசார இலாகாவைத் தவிர, தூரக் கிழக்கு நாடுகளுக்காக பிரிட்டன் சிங்கப்பூரில் ஒரு வானொலி நிலையத்தை நடத்தி வருகிறது.

உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பிரசாரத்தை நடத்துவதற்காக பிரிட்டிஷ் சர்க்கார் சொந்தமாக ஏற்படுத்தி யிருக்கும் ஸ்தாபனங்கள் இவை.

இவற்றைத் தவிர வேறு இரண்டு தனிப்பட்ட ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று உலகப் புகழ்பெற்ற பி. பி. ஸி. நிலையம்; மற்றொன்று பிரிட்டிஷ் கௌன்ஸில்.

இவை பெயரளவில்தான் தனிப்பட்ட ஸ்தாபனங்களே யொழிய, அவற்றின் மீது சர்க்காரின் பூரண ஆதிக்கம் இருக்கிறது.

பிரிட்டிஷ் சர்க்கார் வருஷத்துக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை பி. பி. ஸி. நிலையத்துக்கு நன்கொடையாக வழங்குகிறார்கள். அதற்காக பி. பி. ஸி. நிலையம் செய்ய வேண்டிய முக்கிய வேலைகள் இரண்டு. (1) ஐரோப்பிய நாடுகளுக்கு மத்திய அலையிலும் சிற்றலையிலும் ஒலி பரப்புவது. (2) ஐரோப்பாவைத் தவிர உலகத்தின் மற்றப் பகுதிகளில் உள்ள எல்லா நாடுகளுக்கும் சிற்றலையில் ஒலி பரப்புவது.

பி. பி. ஸி.யின் குரல் புகாத நாடே உலகத்தில் இல்லை. தீவு தீவாந்தரங்களையும் எண்ணற்ற சமுத்திரங்களையும் மலைகளையும் தாண்டிக்கொண்டு பி. பி. ஸி.யின் குரல் எங்கெங்கெல்லாமோ செல்லுகிறது. கோடிக் கணக்கான மக்கள் அந்தக் குரலைக் கேட்கிறார்கள். நாற்பத்து மூன்று பாஷைகளில் பி. பி. ஸி. செய்திகளை ஒலி பரப்புகிறது என்பதைக் கேட்டதும் நமக்கு மூர்ச்சை போட்டு விழலாமா என்று கூடத் தோன்றும்.

அந்த நாற்பத்து மூன்று பாஷைகளில் தமிழ் ஒன்று! மராத்தி ஒன்று! வங்காளி பாஷை ஒன்று!

மற்றொரு தனிப்பட்ட பிரசார ஸ்தாபனம் பிரிட்டிஷ் கௌன்ஸில்.

பி. பி. ஸி., வானொலி மூலம் மாத்திரம் பிரசாரத்தை நடத்துகிறது. ஆனால் பிரிட்டிஷ் கௌன்ஸில் வானொலியுடன் மட்டு மல்லாமல் வேறு பற்பல துறைகள் மூல மாகவும் பிரசாரத்தை நடத்துகிறது. பிரிட்டனைப் பற்றிய செய்திகளை உலக முழுவதும் பரப்புவதும் பிரிட்டனுக்கும் மற்ற நாடு களுக்கு மிடையே நல்லுறவை வளர்ப்பதும் தான் இதன் நோக்கம். பிரிட்டிஷ் வெளி நாட்டு மந்திரி பெவினுக்கு இந்த ஸ்தாபனத் தில் அதிக சிரத்தை உண்டு. நாற்பத்தைந்து நாடுகளில் இதற்குக் கிளை ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஏறக்குறைய ஒரு லட்சம் பேர் இதில் வேலை பார்க்கிறார்கள்.

லெப்டினன்ட் ஜெனரல் சர் ரோனல்ட் ஆடாம் என்பவர் இந்த ஸ்தாபனத்துக்குத் தலைவர்.

சமீபத்தில் இந்த பிரிட்டிஷ் கௌன்ஸில் ஸ்தாபனம், பெனிஸிலினைக் கண்டு பிடித்த லர் அலெக்ஸாண்டர் பிளெமிங் என்ற விஞ் ஞானியை ஆஸ்திரியாவுக்கு அனுப்பி பெனி ஸிலினைப் பற்றி அங்கு பிரசாரம் செய்யும் படி செய்தது. தாமஸ் ஷார்ப் என்பவரை பல்கேரியாவுக்கு அனுப்பி நகர் அமைப்புத் திட்டத்தைப் பற்றிப் பிரசாரம் செய்யும்படி செய்தது. பல்லாயிரக் கணக்கான மைல் களுக்கு அப்பால் உள்ள ஆஸ்திரேலியாவில் ஏதோ ஒரு மூலையில் சுரங்கத் தொழிலாளர் அதிகமாக வசிக்கும் பகுதிக்கு ஒரு நாட்டிய கோஷ்டியை அனுப்பியது; உள்நாட்டு யுத் தத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கும் கிரீஸுக்கு ஆங்கில இலக்கியப் பண்டிதர்களை அனுப்பி இலக்கியப் பிரசங்கங்கள் நடத்தி யது; ஹங்கேரிக்கு விவசாய நிபுணர்களை அனுப்பிச் செடி வளர்ப்பைப் பற்றிச் சொற் பொழிவுகள் நிகழ்த்தியது.

இதெல்லாம் என்னத்திற்காக? ஹங்கே ரிக்கும் ஆஸ்திரியாவுக்கும் பல்கேரியாவுக் கும் பிரிட்டன் ஆட்களை அனுப்பி ஏன் விஞ் ஞான ஆராய்ச்சி, கலை வளர்ச்சி முதலிய விஷயங்களைப் பற்றிப் பிரசாரம் செய்யச் சொல்லவேண்டும்?

இத்தகைய பிரசாரத்தின் மூலம் உலக முழுவதும் எப்படியாவது தங்களுக்குச் சாதக மாக நல்லெண்ணத்தையும் கட்டையும் வளர்த் துக்கொள்வதுதான் அவர்களுடைய நோக்கம்.

## ருஷ்யப் பிரசாரம்

பிரிட்டனில் பிரிட்டிஷ் சர்க்கார் பிர சாரத்தை நடத்துகிறது; அமெரிக்காவில் அமெரிக்க சர்க்கார் பிரசாரத்தை நடத்து கிறது. ஆனால், ருஷ்யாவிலோ ருஷ்ய சர்க்கார் பிரசாரத்தை நடத்துகிறது என்று சொல்லுவதை விட ருஷ்ய மக்களே பிரசா ரத்தை நடத்துகிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆயிரம் பேரா, லட்சம் பேரா? ருஷ்யா விலே பிரசாரத்துக்காகப் பதினான்கு லட்சம் பேர் இருக்கிறார்கள்; ஆம், 14 லட்சம் பேர்! பதினான்கு லட்சம் பேருக்கும் ருஷ்யா சம்பளம் கொடுக்கிறது. பிரசாரம் செய்வது ஒன்றைத் தவிர வேறு வேலையே அவர் களுக்குக் கிடையாது.

சம்பளம் வாங்கும் இந்தப் பதினான்கு லட்சம் பேரைத் தவிர, ருஷ்யாவின் மூலை முடுக்கெல்லாம் இருக்கும் பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்த லட்சக் கணக்கான ருஷ்ய மக்களும் ருஷ்ய அதிகாரிகளும் ஒவ் வொரு நாளும் கொஞ்ச நேரமாவது பிரசா ரம் செய்தாக வேண்டும்.

சோவியத் ருஷ்யாவின் மொத்த ஜனத் தொகை 19 கோடி. ஏதாவது ஒரு முக்கிய அவசரம் ஏற்படும்போது, ஜனத்தொகையில் நூற்றுக்கு ஐந்து பேர்கள் பிரசாரம் செய்ய வந்துவிடுவார்களாம். அதாவது, ஏறக் குறைய ஒரு கோடிப் பேர்! ருஷ்யாவில் ருஷ்ய தேசமே பிரசாரத்தை நடத்துகிறது என்று சொல்லுவதில் தவறு இல்லை அல்லவா?

சோவியத் ருஷ்யா பிரசாரத்தின் மூலம் பல உள்நாட்டுப் பிரச்னைகளை அற்புதமாகச் சமாளித்துக் கொள்ளுகிறது.

விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக ஓர் இயக்கம் நடந்தது. அதில் பத்து லட்சம் பேர் கலந்து பிரசாரம் செய்தார்கள்.

யந்திர உற்பத்தியைப் பெருக்குவதற்காக ஓர் இயக்கம் நடந்தது. அதில் பதினைந்து லட்சம் பிரசாரகர்கள் கலந்து கொண்டு பிர சாரத்தை நடத்தினார்கள்.

தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் சோம்பலை ஒழிக்க வேண்டும் என்பதற்காக ஓர் இயக்கம் நடந்தது. அதில் இரண்டு லட்சம் பேர் கலந்து கொண்டு பிரசாரம் செய்தார்கள்.

இரண்டாவது மகாயுத்தத்தில் ருஷ்யா எவ்வளவோ சேதமும் நாசமும் அடைந்தது. அதனுடைய தொழிற்சாலைகளில் பெரும்

# அவர் வழக்கம்!



முதல் வியாபாரி :—பத்திரிகையிலே ஏகப் புகாரா யிருக்காமே,—வெளிநாடுகளுக்கு நாம் அனுப்புகிற சாமான்களிலெல்லாம் ஒரே கல்லும் மணலும் கலந்திருக்கிறதென்று!

இரண்டாவது வியாபாரி:—எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை; நான் உள்ளூர் சாமான் களில்தான் கல்லும் மணலும் கலப்பது வழக்கம்!

---

பாலானவற்றை ஜெர்மானியர்கள் அழித்து நாசமாக்கினார்கள்; விளை நிலங்களை கட்டுப் பொசுக்கிச் சுடுகாடாக்கினார்கள். பெரிய பெரிய அணைக்கட்டுகளையும் பாலங்களையும் உடைத்துத் தள்ளினார்கள். பொதுவாகச் சொல்லப் போனால் யுத்தத்தில் ருஷ்யா அடைந்ததைப் போன்ற சேதத்தை உலகத் தில் வேறு எந்த நாடும் அடையவில்லை. அப்படி யிருந்தும் ருஷ்யா மூன்று நான்கு வருஷங்களுக்குள் சமாளித்துக் கொண்டு பழைய நிலைமைக்கு வந்துவிட்டது. இந்த மகத்தான அற்புதத்தை ருஷ்யா சாதிக்க முடிந்ததில் ருஷ்யப் பிரசாரத்துக்கு முக்கிய மான பங்கு உண்டு.

* * *

ருஷ்யப் பிரசாரம் எப்படி நடக்கவேண் டும், அதனுடைய கொள்கை எப்படிப் பட்ட தாக இருக்கவேண்டும் என்பதை ருஷ்யப் பொதுவுடைமைக் கட்சி முடிவு செய்கிறது. இதை நிறைவேற்றி வைக்கும் ஸ்தாபனத் துக்கு அஜிட்பிராப் என்று பெயர். இதற்குத் தேசமெங்கும் கிளைகள் உள்ளன. ருஷ்ய உள்நாட்டுப் பிரசாரத்துக்கு இந்த அஜிட் பிராப் ஸ்தாபனம்தான் பொறுப்பு. வெளி நாடுகளில் செய்யவேண்டிய பிரசாரத்தை ருஷ்ய வெளிநாட்டிலாக்காவுடன் இணைக் கப்பட்டிருக்கும் ஸ்தாபனம் கவனித்துக் கொள்கிறது.

அஜிட்பிராப் ஸ்தாபனம் ஐந்து பகுதி களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஐந்து பகுதிகளும் பல உப பகுதிகளாகவும் தனித்தனி இலாக்காக்களாகவும் கிளைகளாக வும் பிரிக்கப்பட்டுள்ளன.

அஜிட்பிராப் ஸ்தாபனத்துக்கு மிக்க செல் வாக்கு உண்டு. இப்போதிருக்கும் இருபத் தைந்து உயர்தர ருஷ்யத் தலைவர்களிலே அஜிட்பிராப் தலைவரும் ஒருவராகக் கருதப் படுகிறார். மிஹெயில் சஸ்லாவ் என்பவர்தான் தற்போது அஜிட்பிராப்புக்குத் தலைவர். சமீபத்தில் நடந்த உலக மகாயுத்தத்தின் போது, சஸ்லாவ் வடகாகஸஸ் நாட்டில் ஜெர்மானியர்களை எதிர்த்து கொரில்லாப் போர் நடத்திவந்தார். ஜெர்மானியர் கைப் பற்றி யிருந்த ருஷ்யப் பகுதியில் இரகசியப் பிரசாரமும் நடத்தி வந்தார். அவருடைய உழைப்பையும் ஊக்கத்தையும் கண்டு மகிழ்ச்சி யடைந்த ஸ்டாலின் 1947-ம் வருஷம் அவரை அஜிட்பிராப் ஸ்தாபனத் துக்குத் தலைவராக நியமித்தார்.

சோவியத் ருஷ்யாவில் வெளியாகும் ஒவ்வொரு புத்தகமும் துண்டுப் பிரசுரமும் பத்திரிகையும் பிரசாரத்தை முக்கிய லட்சிய மாகக் கொண்டு நடக்கிறது.

இதைத் தவிர அஜிட்ப்ராப் ஸ்தாபனம் கீழ்கண்ட ஒன்பது வகையான பிரசாரத்தை நடத்தி வருகிறது:

1. தனி மனிதர்களின் வாய்மொழிப் பிரசாரம்.
2. பொதுக் கூட்டச் சொற்பொழிவுப் பிரசாரம்.
3. படங்கள் - கார்ட்டூன்கள் மூலம் பிரசாரம்.
4. வானொலி மூலம் பிரசாரம்.
5. சினிமா மூலம் பிரசாரம்.
6. நாடகத்தின் மூலம் பிரசாரம்.
7. கண்காட்சி மூலம் பிரசாரம்.
8. அரசியல் விழாக்கள் மூலம் பிரசாரம்.
9. ராணுவ ஆர்ப்பாட்டங்கள் மூலம் பிரசாரம்.

யுத்தத்தின்போது மாஸ்கோ ரேடியோ செய்த வீராவேசம் மிக்க ஒலிபரப்பை யாரும் மறக்கவே முடியாது. அது ருஷ்ய மக்களுக்கு மட்டுமல்ல, ஹிட்லரை எதிர்த் துப் போரிட்ட தேசநாட்டு மக்கள் எல்லோ ருக்குமே ஒரு பக்கபலமாக விளங்கி வந்தது.

மாஸ்கோ ரேடியோ எதிரிகள் கையில் அகப்பட்டாலும் அகப்பட்டுவிடும் என்று நினைத்து, ஸ்டாலின் வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள யூரல் மலைகளில் ஒரு ரேடியோ நிலையத்தை ஸ்தாபித்தார். இதற்கு 'ஸ்டாலின் ரேடியோ' என்று பெயர். இது 2,500 கிலோவாட் சக்தி உள்ளது. உலகத்தில் உள்ள எல்லா ரேடியோ நிலையங்களையும்விட ஐந்து மடங்கு அதிக சக்தி உள்ளது.

ஜெர்மனி ருஷ்யாவுக்காக பெர்லின் ரேடியோவில் செய்த பிரசாரங்களை இடைமறித்து யாரும் கேட்க முடியாதபடி செய்வதற்கு இந்த ரேடியோ முக்கியமாக உபயோகிக்கப்பட்டது. இதைத் தவிர வேறு பல வேலைகளுக்கும் இது உபயோகப்படுத்தப்பட்டது. ஹிட்லராவது கோயபெல்ஸாவது ரேடியோவில் பேசிக்கொண்டே இருக்கும்போது ஸ்டாலின் ரேடியோ திடீரென்று நடுவில் புகுந்து, "பொய், பொய், நீர் சொல்லுவது முழுவதும் பொய்!" என்று சொல்லும். இந்தமாதிரி நடுவில் புகுந்து சொன்னால் அது ஹிட்லருக்கு எவ்வளவு பெரிய அவமானம்! இதற்குப் பயந்துகொண்டு ஹிட்லர் ரேடியோவில் அதிகமாகப் பேசுவதை நிறுத்திவிட்டார்.

இப்போது ருஷ்யா ஸ்டாலின் ரேடியோவை அதிகமாக உபயோகிப்பது இல்லை. பிரமாண்டமான அந்த ரேடியோ உறங்கிக் கொண்டிருக்கிறது. அவ்வப்போது 500 கிலோவாட் சக்தியில் மாத்திரம் உபயோகிப்பது உண்டு. மகா யுத்தத்தைப் போன்ற நெருக்கடியான கட்டம் ஏதாவது ஏற்பட்டால்தான் இது முன்போலப் பூரண வேகத்தில் உபயோகப்படுத்தப்படும்.

ருஷ்யா பிரசாரத்தைப் பரப்புவதில் எவ்வளவு சிரத்தை கொண்டிருக்கிறதோ அதைப் போல அந்நாட்டைப் பற்றித் தப்பான பிரசாரம் எதுவும் உள்நாட்டில் பரவிவிடாதபடி தடுப்பதிலும் அதிசிரத்தை கொண்டிருக்கிறது. இதற்காக ஒரு ஸ்தாபனமும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதன் பெயர் கிளாவ்லிட். இதை ஏறக்குறைய ஒரு தணிக்கை போர்டைப் போல என்று வைத்துக்கொள்ளலாம். அச்சான புத்தகங்கள், ஓவியங்கள், கார்ட்டூன்கள், ரேடியோப் பேச்சுகள் முதலியவற்றில் இதற்குப் பூரண ஆதிக்கம் உண்டு. உதாரணமாக, ருஷ்யாவில் ஒரு புத்தகத்தை வெளியிடுவதென்றால், முதலில் இருபத்தெட்டுப் பிரதிகளை மாத்திரம்தான் அச்சடிக்க முடியும். அந்த இருபத்தெட்டுப் பிரதிகளையும் கிளாவ்லிட் ஸ்தாபனத்தில் உள்ள இருபத்தெட்டுத் தணிக்கை அதிகாரிகளுக்கு அனுப்ப வேண்டும். அவர்கள் பார்த்து 'சரி' என்று சொன்னால்தான் மேற்கொண்டு அந்தப் புத்தகத்தை அச்சடிக்கலாம்; இல்லாவிட்டால் அச்சடிக்க முடியாது. இது சம்பந்தமான சர்க்கார் உத்தரவு ஒன்று கூறுவதாவது:

"அச்சிடக் கூடாது என்று கிளாவ்லிட் டெலிபோன் மூலமோ தபால் மூலமோ தந்தி மூலமோ உத்தரவிட்டால், அந்தப் புத்தகத்தை அச்சடிப்பதை உடனே நிறுத்திவிட வேண்டும்; தவறி சில பிரதிகள் அச்சிட்டிருந்தால் அவற்றையெல்லாம் மொத்தமாகக் கட்டி முத்திரை வைத்து ஜாக்கிரதையாக அறைகளில் வைத்துப் பூட்டிவிட வேண்டும்."

என்ன கண்டிப்பு! என்ன ஜாக்கிரதை!

ஆனால், இதற்கு விதிவிலக்காக,—அதாவது கிளாவ்லிட் ஸ்தாபனத்துக்கு அனுப்பாமலேயே சில பிரசுரங்களையும் அச்சடிக்கலாம். அப்படி விதிவிலக்குப் பெற்றிருப்பவை: கணக்குப் புத்தகங்கள், நோட்டுப் புத்தகங்கள், ரசீதுகள், பட்டியல்கள்!



முதல் மனிதர்:—என்ன ஸார்! அந்தப் போலீஸ்காரன் யாரைத் தேடுகிறான்? 'சிவனே!' என்று படுத்துத் தூங்குகிற மனிதனை அவ்வளவு கவலையாகப் பார்க்கிறானே?

இரண்டாவது மனிதர்:—அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர் ஒருவரைக் காணோமாம். ஒருவேளை இந்தத் தூங்குமூஞ்சி மனிதர்தானோ என்று பார்க்கிறான் போலிருக்கிறது!

[அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர் ஒருவர் சபையில் தூங்குவதற்கு அனுமதி கேட்டாராம்.]

இவற்றை எத்தனை ஆயிரம், லட்சம், கோடி வேண்டுமானாலும் அச்சடித்துக் கொள்ளலாம்!! ஆனால், அதிலும் 'ஏதாவது ஒரு அரசியல் சுலோகமோ, படமோ இருந்துவிட்டால் அதையும் சென்ஸிட்டுக்குக் காட்டித்தான் ஆகவேண்டுமாம்.

இந்த சென்ஸிட் ஸ்தாபனத்தைப் போல மற்றொரு ஸ்தாபனமும் உண்டு. அது 1934-ம் வருஷம் ஏற்படுத்தப்பட்டது. ஸினிமா, நாட்டியம், நாடகம், சர்க்கஸ், கிராமபோன் ரிக்கார்ட் முதலியவற்றைத் தணிக்கை செய்வதுதான் அதன் வேலை. அதனுடைய அங்கீகாரம் பெறாமல் ஒரு நாட்டியமோ, சர்க்கஸோ, நாடகமோ நடத்த முடியாது.

* * *

பிரிட்டிஷ் பிரசாரமும் ருஷ்யப் பிரசாரமும் ஒவ்வொரு முறையில் பிரமாதமாகத்தான் வளர்ந்திருக்கிறது. ஆனால் இந்த இரண்டு நாடுகளின் பிரசார இயந்திரங்களையும் தோற்கடித்துவிடக்கூடிய முறையில் அமெரிக்கர்கள் தங்கள் பிரசார ஸ்தாபனத்தை வளர்த்துக்கொண்டு வருகிறார்கள்.

இதற்கு என்ன ஆதாரம் என்று கேட்கிறீர்களா? பிரிட்டிஷ் பிரசாரத்தையும் ருஷ்யப் பிரசாரத்தையும் பற்றி மேலே கூறிய விவரங்கள் எல்லாம் அமெரிக்கப் பத்திரிகைகளிலிருந்து திரட்டப்பட்டவையாகும். அமெரிக்கப் பிரசாரத்தின் பெருமையைப் பற்றிக் கூற இதைவிட வேறு என்ன அத்தாட்சி தேவை?

உலகத்தில் உள்ள பெரிய நாடுகளில் பிரசாரம் மிகக் குறைவாக நடைபெறும் நாடு எது தெரியுமா? சந்தேகம் என்ன? நமது இந்தியா தேசம்தான்! தேசிய ஆர்வத்தினால் சுதந்திர சர்க்காருக்கு உதவி செய்யத் தயாராயிருக்கும் தேசியப் பத்திரிகைகளைக் கூட நம்முடைய சர்க்கார் சரிவரப் பயன்படுத்திக் கொள்ளவில்லையே! — எம். எல். என்.

## விபுலானந்தர் மணி மண்டபம்



ஈழநாட்டின் அருந்தவப் புதல்வரும் தமிழ்ப்பேராசிரியருமான சுவாமி விபுலானந்தர் ஞாபகார்த்தமாக இலங்கை அக்கரைப் பற்று என்னும் நகரத்தில் கட்டப்பட்ட மணி மண்டபத்தை, கோவை ராமகிருஷ்ண வித்தியாலயக் காரியதரிசி சுவாமி நிஷ்காமானந்தஜி சென்ற 12-5-49 அன்று திறந்து வைத்தார். வாழ்க விபுலானந்தர் திருநாமம்!




**ஏ.ஸி, டி.ஸி.**

**விசிறிகள்**

- சீலிங் விசிறிகளும், டேபிள் விசிறிகளும்.
- மின்சார பம்புகளும், கை பம்புகளும்.
- மின்சார மோட்டார்கள்.

தி கல்கத்தா எலெக்ட்ரிகல் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
4, ஸ்டிரிங்கர் தெரு, மதராஸ்.
கிளை ஆபீஸ்கள்: கல்கத்தா, பம்பாய், டெல்லி, கான்பூர், பாட்னா.

# நீலகிரிக்கு ஒரு டிக்கெட்டு!

[ஜா. ரா.]

முனிசாமியும் வீரம்மாளும் பனங்காட்டுக் கிராமத்திலேயே மிக மிக ஒற்றுமையுள்ள தம்பதிகள் என்று அவர்களுக்கு விவாகமான புதிதில் ஒரு பிரசித்தி ஏற்பட்டிருந்தது. பிறகு குடிப் பழக்கத்தினால் வீட்டில் சண்டையும் சச்சரவும் மலிந்து அந்தப் பிரசித்தி காலடையில் மறைந்து போய் விட்டது. “இதென்ன, முனிசாமி வீடாட்டம் ஆயிடுச்சே!” என்று சண்டை நடக்கும் இடங்களிலெல்லாம் ஊர் ஜனங்கள் சொல்லும்படியான ஸ்திதிக்கு அவர்களுடைய ஒற்றுமை குலைந்து போய்விட்டது. குடிப் பழக்கம் காரணமாக ஏற்பட்ட சண்டைப் பழக்கம் குடி தொலைந்தும் விடவில்லை!

முனிசாமி தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்தான் என்று சத்தியம் செய்யக் கூடியவன். வீரம்மாளுக்கும் தணிந்து போகும் சுபாவம் கிடையாது. இத்தகைய மனோபாவம் படைத்த தம்பதிகளிடையே சண்டை ஏற்பட இதுவே போதிய காரணமாயிற்று. ஆனால் இந்தச் சண்டைக் குணத்தால் அவர்களிடையே வேரூன்றியிருந்த பரஸ்பரம் அன்பை அழிக்க முடியவில்லை. சாந்தமான சமயங்களில் இருவரும் சல்லாபமாய் இருக்கும்போது, “நம்ம ரெண்டு பேரும் அப்படிச் சண்டையிடவும் வேண்டாம்; இப்படிக் கொஞ்சவும் வேண்டாம்!” என்று வீரம்மாள் சொல்லுவாள். “இதோ பாரு! அப்படி நாம் சண்டை போடறதினாலேதான் இப்படிக் கொஞ்சவும் முடிகிறது. நம்ம ரெண்டு பேர் கிட்டேயும் கபடம் கிடையாது. சண்டை போடாமே, அதாவது வெளிப்படையாத் தெரியாமே—இருக்கிற குடும்பங்களிலே உள்ளுற எம்மாம் பொகைச்சல் இருக்கும், தெரியுமா?” என்பான் முனிசாமி.

★

ஒரு நாள் சீட்டாட்டத்தில் முனிசாமி கைப்பணத்தையெல்லாம் இழந்துவிட்டுச் சோர்வுடன் திரும்பி வந்தான்.

“என்ன, உடம்பு சரியில்லையா? என்னவோபோல இருக்கிறியே?” என்று பரிவுடன் விசாரித்தாள் வீரம்மாள்.

“ஆமாம், உடம்புக்கு என்ன வந்திடுச்சி! பேசாமே போ. அப்பாலே!” என்று எரிந்து விழுந்தான் முனிசாமி.

வீரம்மாளுக்கு ரோஷம் வந்துவிட்டது. “ஆமாம், பொட்டிக்குள்ளே இருந்த பணம் அஞ்சு ரூவாயையும் எடுத்துக்கிட்டுப் போனியே, எங்கே போனே? எதுக்காகப் பணம்?” என்று குறுக்கு விசாரணை செய்தாள்.

இந்தச் சமயத்தில் சந்தர்ப்பம் தெரியாமல் அவனுடைய நண்பன் செங்கோடன் வந்து, “முனிசாமி அண்ணே! உனக்கு அஞ்சு ரூவா தோற்பாமல்லவா? என்ன அண்ணே! போயும் போயும் அந்தப் பாளையத்தான் கூட்டத்தோட சீட்டாடலாமா? முழிச்சிருக்கும்போதே கண்ணிலே மண்ணைத் தூவிடுவான்களே!” என்று துக்கம் விசாரித்தான்.

வீரம்மாள் எதிரில் நின்றதால் செங்கோடனுக்கு ஒரு ஜாடையும் காட்ட முடியவில்லை. முனிசாமிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

“டேய்! செங்கோடப் பயலே! வெளியே போறியா, அல்லாட்டி உன் கழுத்தை வெளரிப் பிஞ்சு கணக்கா முறிக்கட்டுமா?” என்று முனிசாமி கேட்டவுடன் செங்கோடன் வெளியே நழுவி விட்டான்.

“செங்கோடன் கழுத்தை முறிக்க மாட்டியா? நல்லா முறிப்பே! போலீசிலே வந்து கையிலே காப்பு மாட்டிப்பிடுவாங்க! உன் வீராப்பெல்லாம் வீரம்மா கிட்டேதான் நடக்கும்! போலீசுகிட்டே உன் வேலை நடக்குமா? ......மோசக்காரப் பாவி! நான் வயித்தை ஒடுக்கி, வாயை ஒடுக்கிச் சேர்த்த பணத்திலே கையை வச்சுப்பிட்டாயே!” என்று கூறி ஒப்பாரி வைக்க ஆரம்பித்தாள் வீரம்மாள்.

வாயால் வழங்கத் தகுதியற்ற அநேக வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, முனிசாமி, “இதோ பாரு, கழுதே! இதேபோலச் சண்டையிட்டுப் பொலம்புறதானா நீ என் கிட்டே இருக்க வேணும்! எங்கேயாச்சும் ஒழிஞ்சு போயிடு. நீ போகாட்டி நான் போறேன்!” என்று கூறி முத்தாய்ப்பு வைத்தான்.

வீரம்மாளின் கோபம் எல்லை கடந்தது. கோப மூட்டப்பட்ட சிறுத்தைபோல அவள் உறுமினாள்.

“பாவி மகனே! நீ என்னைப் போ என்று சொல்லலாச்சா! உம் மகளை எனக்குக்

கொடுன்னு எங்கப்பன் காலிலே வந்து விளுந்ததெல்லாம் மறந்து போச்சா! அப்போ எந்த நாக்கு அப்படிக் கேட்டது?... நான் உன்னோட இனி இருக்கப் போறதில்லே! எங்க அண்ணன் சிலோனிலே தேயிலைத் தோட்டத்திலே வேலை செய்ய வாரியான்னு முன்னமே கேட்டிச்சு. அங்கே போய் இந்த ஒத்தை வயித்தைக் கழுவிக்கிறேன். இன்னமே உன்னோடு இருக்க மாட்டேன் — இன்னிக்கே கிளம்பிடப் போறேன்; நெசந்தான்! வெளையாட்டாங் காட்டியும்னு நெனைச்சப்புடாதே!'' என்று



கூறிவிட்டு வீரம்மாள் எழுந்தாள். நேரே வண்டிக்கார மருதையன் வீட்டுக்குச் சென்றாள். உடனே ஸ்டேஷனுக்குப் போக வண்டியைக் கட்டிக்கொண்டு வரச் சொல்லி விட்டு வீட்டுக்குத் திரும்பினாள்.

அவள் வீட்டிற்குத் திரும்பியவுடன் உள்ளே கண்ட காட்சி அவளுடைய மனதை உருக்கியது. முனிசாமி சோறு சமைத்துக் கொண்டிருந்தான். முன்பின் சமைத்துப் பழக்க மில்லாததால் அவன் சமயலறையில் தண்ணீரைக் கொட்டி ஒரு பாத்திரத்தை மற்றொரு பாத்திரத்தின்மேல் கவிழ்த்து ஒரே களேபரம் செய்திருந்தான். வீரம்மாளின் கோபம் சற்றுத் தணிந்தது. மனதில் பச்சாத்தாபம் ஏற்பட்டது. ''உன்னால என்ன செய்யறியாம்?'' என்று பலவந்தமாகக் கோபத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டாள்.

''சண்டை போட்டா வயிறு பசிக்காதா? நீதான் ஊருக்குப் போயிடப் போறே! நான் தானே இனிமே சோறாக்கணும்?''என்றான் முனிசாமி.

வீரம்மாளின் கண்களில் பொல பொல வென்று நீர் முத்துக்கள்போல உதிர்ந்தன. ''சரி! நீ அப்பாலே, போ! இங்கே இருக்கிற வரையிலும் நானே சோறாக்கிப் போடறேன்!'' என்று தளர்ந்துபோன மனதை இழுத்துப் பிடித்துக்கொண்டு சொன்னாள்.

சற்று நேரத்தில் வண்டிக்காரன் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக வண்டியை ஓட்டிக் கொண்டு வந்து சேர்ந்தான்.

வீரம்மாள், ''வண்டிக்கார ஐயா! நான் ஊருக்குப் போறதை நிப்பாட்டிப்புட்டேன். கோவிச்சுக்காதீங்க! கால் ரூவா சில்லறை வேணும்னு வாங்கிக்கிட்டுப் போங்க!'' என்று வண்டிக்காரனிடம் சமாதானம் சொன்னாள்.

''ரொம்ப நல்லா யிருக்கு, பொம்பளே! புருசன் பெண்டாட்டி சண்டை என்கிறது சரியாய்த்தான் இருக்குது; எல்லாச் சண்டையும் ராவுக்குள்ளே தீர்ந்து போயிடுது!'' என்று எக்காளத்துடனும் கோபத்துடனும் சொல்லிவிட்டுச் சென்றான் வண்டிக்காரன்.

அன்றைய சண்டை அத்துடன் தீர்ந்தது.

★

அடுத்த சில நாட்களுக் கெல்லாம் வேறொரு பெரிய சண்டை கிளம்பிற்று. முனிசாமிக்கு வெகு நாட்களாக நாய் வளர்க்க வேண்டும் என்று ஆசை. எங்கிருந்தோ நல்ல நாய் ஒன்றை விலை கொடுத்து வாங்கிக்

கொண்டு வந்தான். வீரம்மாளுக்கு நாய்களைக் கண்டாலே பிடிக்காது. அந்த நாயை உடனே திருப்பிக் கொடுக்காவிட்டால் பெரிய சண்டை வரும் என்று பயமுறுத்தினாள். முனிசாமி அவளுடைய வார்த்தைகளை லக்ஷியம் செய்யவில்லை.

"நம்ம ரெண்டு பேர் திக்கவே சோறு இல்லையாம்! இந்தக் கேட்டிலே ஒரு நாய் வேறே! கூறு கெட்ட புருசங்களைக் கட்டிக்கிட்டாலே இப்படித்தான் ஏதாவது தகராறு வந்துக்கிட்டே யிருக்கும்.........!" என்று காரசாரமாகப் பேசினாள் வீரம்மாள்.

முனிசாமிக்கு இந்த வார்த்தை 'சுருக்' கென்று பட்டது. "ஏ புள்ளே! நான் பெரிய ரோசக்காரன். நான் ஒரு வைராக்கியம் வச்சப்புட்டேன்னா அதை நிறைவேத்திப்பிட்டுத்தான் மறு வேலை பார்ப்பேன்! உன்னைப் போல காலையிலே ஒரு பேச்சு, மாலையிலே ஒரு பேச்சு என்கிட்டே கிடையாது......!" என்று குத்தலாகப் பேசினான்.

"இதோ பாரு! இந்த வீட்டிலே நாய் இருக்கிறதானா நான் இருக்கமாட்டேன், எங்க அப்பன்மேலே ஆணையிட்டுச் சொல்லிப்பிட்டேன்!......"

வீரம்மாளின் பிடிவாதம் முனிசாமியின் ஆத்திரத்தைத்தான் அதிகப் படுத்தியது. "நாய் இந்த வீட்டிலேதான் நான் சாவற மட்டும் இருக்கப்போவுது! என்னடி யாத்தா பண்ணிப்புடுவே? உன்னாலே ஆனதைப் பார்த்துக்க!" என்று அவன் கண்டிப்பாகச் சொல்லிவிட்டான்.

"என்னாத்தைச் செஞ்சுடுவேன்னு கேட்கிறே? இந்த நிமிசத்திலேயே நீலகிரிக்கு எங்க அண்ணன் வீட்டுக்குப் போயிடுவேன். மனசு வெச்சேன்னா அப்புறம் இந்தப் பனக்காட்டுப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டேன்!" என்றாள் வீரம்மாள்.

"மகா ரோசக்காரிதான், புள்ளே! உன் சங்கதி அன்னைக்கே விளங்கிப்போச்சே! அப்படியே போயிடுவேனுன்னு காட்டிம்புனு மெரட்டினையே, போவறதை யாரு நிப்பாட்டினாங்களாம்?" என்றான் முனிசாமி.



வீரம்மாளுக்கு எரிகிற நெருப்பில் பெட்ரோலை ஊற்றியது போல ஆயிற்று. "அடபாவி மனிசா! உம்மேலே இரக்கப்பட்டு உன் வயிறு காயுமென்னு ஊருக்குப் போவாமே யிருந்தா அதைக் கேலி செய்யறியா? உன்னோட வாழ்வு இன்னையோட தீர்ந்து போயிடுச்சு!" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே ஓலமிட்டாள். பிறகு தன் துணிமணிகளை யெல்லாம் தேடியெடுத்து மூட்டை கட்ட ஆரம்பித்தாள்,

இத்தனைக்கும் காரணமான நாய் மௌனமாக இந்த நாடகத்தை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தது. முனிசாமியும் தடையொன்றும் சொல்லாமல் அவளுடைய நடவடிக்கைகளைக் கண்காணித்துக் கொண்டிருந்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் வீரம்மாள் வண்டிக்காரனை அழைத்து வந்தாள். தன்னுடைய துணி மூட்டையை வண்டிக்குள் வைத்தாள்.

"நான் என் அண்ணன் வீட்டுக்குப் போயிடறேன்; இனியாச்சும் சந்தோசமாயிரு!" என்று கண்ணீரை அடக்கிக் கொண்டு புருஷனிடம் சொல்லிவிட்டு வண்டிக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.



பையன் (சிரித்துக் கொண்டே):—அப்பா! எங்கள் பள்ளிக்கூடத்தில் புதிதாக ஒரு வாத்தியார் வந்திருக்கிறார். அவர் எங்களை வாயில் வந்தபடி திட்டுகிறார், அப்பா!

தகப்பனார்:—அது யாருடா, அப்படிப்பட்ட வாத்தியார்? அவர் பெயர் என்ன?

பையன்:—அவருடைய பெயர் ஞானமுத்து ஆசீர்வாதம், அப்பா!

முனிசாமிக்கும் அவள் ஊருக்குக் கிளம்பும் போது மனது மிகவும் வேதனைப்பட்டாலும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் இருந்தான். வீரம்மாளின் எதிரில் தன் மனோதிடத்தை இழக்க அவன் விரும்பவில்லை.

"வண்டிக்கார அண்ணே! டேசனுக்குச் சுருக்க வண்டியை ஓட்டு!" என்று முனிசாமியின் காதில் படும்படி இரைந்தே கூறினாள் வீரம்மாள். வண்டி வேகமாகச் சென்றது. தெரு மூலை திரும்புவதற்கு முன்னால் கழுத்தை ஒடித்துக் கொள்வது போல் சிரமப்பட்டுத் தன் வீடு இருந்த திசையை நோக்கினாள் வீரம்மாள்.

"வண்டிக்கார அண்ணே! மெதுவாக ஓட்டினாப் போதும்!" என்றாள் வீரம்மாள். சற்று முன் வேகமாக ஓட்டச் சொன்னவள் இப்போது வேறுவிதமாகச் சொல்வதைக் கேட்டு வண்டிக்காரன் மனதிற்குள் ஆச்சரியமடைந்தான்.

"என் புள்ளே! வண்டிக்கு நேரமாயிடுச்சே! வண்டியைப் பிடிக்கவேண்டாமா?"

"இந்த வண்டி யில்லாட்டி என்ன அண்ணே? குடியா முழுகிப் போயிடும்? அடுத்த வண்டியைப் புடிச்சாப் போச்சு!"

பணக்காட்டி லிருந்து திம்மனூர் ரயில்வே ஸ்டேஷன் ஆறு மைல் தூரத்திலிருந்தது. எப்படியும் மாட்டு வண்டிப் பிரயாணம் இரண்டு மணி நேரமாவது ஆகும்.

"ஆமாம், புள்ளே! இன்னமே நீ இந்த ஊருக்குத் திரும்பி வரப் போறதே யில்லையா?" என்று கேட்டான் வண்டிக்காரன்.

"இந்த ஊரிலே எனக்கு என்ன வேலை?" என்று பதிலளித்தாள் வீரம்மாள்.

சற்று நேரம் மௌனம்.

"வண்டிக்கார அண்ணே! எனக்காக ஒரு உபகாரம் செய்வியா?"

"அது என்ன உபகாரம்?"

"என் புருசன் சௌக்கியத்தைப் பத்தி மாசத்துக்கு ரெண்டு வாட்டியாச்சும் நீ எனக்கு எழுதணும். கையோட பணம் கொடுத்திட்டுப் போறேன். இத்தனை நாள் என்னோட பழகியதுக்காக இந்த உபகாரம் செய்ய மாட்டியா?............என்னதான் சண்டை யிட்டாலும்........."

மேலே தொடர்ந்து பேச அவளால் முடியவில்லை. குரல் தழுதழுத்தது. கண்ணின் ஓரத்தில் தேங்கி நின்ற கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள்.

வண்டிக்காரனுக்கு இது பெரிய வேடிக்கையா யிருந்தது.

"நீதான் இந்த ஊருக்கே திரும்பி வரப் போறதில்லேன்னு போறியே, அவனைப் பத்தி எம் புள்ளே கவலைப்படறே?"

"தொட்டுத் தாலி கட்டிய தோசம்தான் இப்படிக் கேட்கச் சொல்லுது!" என்றாள் வீரம்மாள்.

★

தூரத்தில் இருப்புப் பாதை கண்ணுக்குப் புலனாயிற்று. இன்னும் சில நிமிஷங்களில் ஸ்டேஷன் வந்துவிடும். வண்டி ஒவ்வொரு அடியும் முன்னே செல்ல, வீரம்மாளின் இருதயம் ஒவ்வொரு அடி பின் வாங்கிற்று. அன்று ரயிலே வராமல் இருந்தால் நல்லது என்றுகூட அவளுக்குத் தோன்றியது.

"ஒரு சங்கதி சொல்ல மறந்திட்டேனே! கம்ப கோனாரு ஊடா பட்டணத்திலேருந்து வரும்போது ஒரு சேலை வாங்கி வந்தாராம். பணமுடையா இருந்திச்சன்னு வித்துப்புடறேன்னாரு; உன் புருசன் இன்னிக்கித்தான் அதை வாங்கிக்கிட்டான்............நீதான்! இன்னைக்கு ஊருக்குப் போறியே! அப்போ அவனும் காலைக்கே அதை வித்துப்புடுவான்!" என்றான் வண்டிக்காரன்.

முன்பே தளர்ந்து போயிருந்த வீரம்மாளின் மனதை இந்த வார்த்தைகள் மேலும் தளர்த்தின. அதற்குள் வண்டியும் ஸ்டேஷனை யடைந்தது. வீரம்மாள் எந்தவிதமான பரபரப்பும் காட்டாமல் வண்டிக்குள் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

"சரி, நீ இறங்கு! மூட்டையை நான் எடுத்துக்கிட்டு வாரேன்!" என்று கூறி, வண்டியை விட்டு இறங்கினான் வண்டிக்காரன்.

வீரம்மாள் தயங்கிக் கொண்டே கீழே இறங்கினாள்.

"நீ போய் டிக்கெட்டுவாங்கி வா! அதுக்குள்ளே நான் பக்கத்துக் கடையிலே ஒரு சாமான் வாங்கிக்கிட்டு வாரேன்!" என்று சொல்லிவிட்டு வண்டிக்காரன் அப்பால் சென்றான். வீரம்மாள் ஏதோ சொல்ல வாயெடுத்தாள்; ஆனால் அதைச் சொல்ல முடியாமல் தயங்கி நின்றாள்.

சில நிமிஷங்களில் வண்டிக்காரன் கையில் சில கண்ணாடி வளையல்களுடன் திரும்பி வந்தான். "அது ரொம்ப ஆசைப்பட்டுச்சு. இப்போ நீ கொடுத்ததுதான் பணம். ரொம்ப நாளா சவாரி யில்லையா, பணமே கிடைக்



ஒருவர்:—இத்தனை நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறோம்; அமிஞ்சிக்கரை பஸ்ஸிலேயே இடம் கிடைக்க மாட்டேன் என்கிறது! கவர்ன்மெண்டிலே திருப்பதிக்குப் பஸ் விடுகிறார்களாமே, என்னத்திற்கு?

மற்றொருவர்:— எல்லோரையும் மழுங்க மொட்டை யடிக்கத்தான்!

---

கல்லே......!" என்று விஷயத்தை விளக்கினான் வண்டிக்காரன். பிறகு, அவன் "அது கிடக்கட்டும்; நீ டிக்கெட் வாங்கிட்டியா? நீலகிரிக்கு அஞ்சு ரூவாய்க்கு மேலே இருக்குமில்லே?" என்றான்.

"வண்டிக்கார அண்ணே! நான் டிக்கெட்டு வாங்கவில்லை......" என்று தயக்கத்துடன் சொன்னாள் வீரம்மாள்.

"எம் புள்ளே தயங்கறே? பணம் போதல்லியா? ரெண்டு ரூவா வேணும்னா நான் தாரேன். வீட்டிலே உன் புருசன் கிட்டே போய் வாங்கிக்கிறேன்!"

"சில்லறை யெல்லாம் சரியாத்தான் இருக்குது; மனசுதான் சரியாயில்லே!"

"ஆமாம், ரொம்ப நாளாப் பழகிப்போன ஊரை விட்டுட்டுப் போறதுன்னா கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கும்!"

"வண்டிக்கார அண்ணே! ஒரு உபகாரம் செய்வியா? கோவிச்சுக்க மாட்டியே!...... வண்டியைத் திரும்பப் பனங்காட்டுக்கே ஓட்டிப்பிடேன்! அது என்னோட என்னதான் சண்டை போட்டாலும்......"

வண்டிக்காரன் விஷயத்தைப் புரிந்து கொண்டான். சற்று நேரம் வீரம்மாளின் முகத்தையே கோபத்துடன் வெறித்துப் பார்த்தான்.

"சரி, சரி! வண்டிக்குள் ஏறு! இன்னமே புள்ளே, நீ வண்டி கேட்டா நான் சத்தியமா

வண்டி கொண்டார மாட்டேன். அன்னைக்கே பாடம் தெரிஞ்சிக்கிட்டிருக்கணும். புத்தி யில்லாமே போச்சு!" என்று கூறிவிட்டு ஏமாற்றத்துடன் வண்டியை ஓட்டினான் வண்டிக்காரன்.

வண்டி கொஞ்ச தூரம்தான் சென்றிருக்கும். ரஸ்தாவின் திருப்பத்தில் தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு கையில் ஒரு சிறு மூட்டையுடன் ஓர் ஆசாமி வேகமாய் வருவது தெரிந்தது. அவன் சற்று சமீபித்தவுடன், "நீ எங்கே ஐயா போறே?" என்று கேட்டான் வண்டிக்காரன். வீரம்மாளும் அந்த ஆளை அப்போதுதான் கவனித்தாள். அந்த ஆள் வேறு யாருமில்லை; வீரம்மாளின் கணவன் முனிசாமிதான்!

முனிசாமி வெகு ஆச்சரியத்துடன் வீரம்மாளையே பார்த்தான். "எம்பா! வண்டி தவறிப் போயிடுச்சா?" என்று தான் கண்ட காட்சியில் நம்பிக்கை கொள்ளாமல் அவன் வண்டிக்காரனை நோக்கிக் கேட்டான்.

"வண்டிக்கு இன்னும் நேரம் இருக்குது! உன் பெண்சாதிக்குத்தான் உன்னை விட்டுப் போக மனசு வரலே!......அது சரி, நீ எங்கே கிளம்பிட்டே?" என்று கேட்டான் வண்டிக்காரன்.

'முனிசாமிக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. அவனுடைய கறுத்த முகம் கூடச் சற்றுச் சிவக்கப் பார்த்தது. "அது தான் கோவிச்சுக்கிட்டு அண்ணன் வீட்டுக்குப் போவுது. நானாவது போய் அதோட அண்ணன் வீட்டிலே பத்து நாள் இருந்திட்டு வந்தா சண்டையெல்லாம் சரியாப் போயிடும்னுதான் வந்தேன்......!" என்று அவன் ஆரம்பித்தான்.

"சரி, சரி; வண்டியை ஓட்டு, அண்ணே!" என்று உத்தரவு கொடுத்தாள் வீரம்மாள்.

முனிசாமி வண்டிக்குள் ஏறிக் கொண்டான்.

வண்டி கொஞ்ச தூரம் சென்ற பிறகு வண்டிக்காரன் உள்ளே பார்த்தான். வண்டி விஸ்தாரமாய் இருந்தபோதிலும் தம்பதிகள் இருவரும் மிகவும் நெருக்கி யடித்து உட்கார்ந்து கொண்டிருப்பது தெரிந்தது. பொத்துக்கொண்டு வந்த சிரிப்பை அடக்கிக் கொள்வதற்காக அவன் "ஹெஹ்ஹே... ஹேய்!" என்று மாடுகளை விரட்டினான்.

# காலக்ஷேபம்

### தெரிகிறது!

"ஏன் தம்பி, அப்பா இருக்கிறாரா?"

"ஏன் மாமா, நான் திண்ணையில் உட்கார்ந்து அக்கறையாய்ப் படிப்பதிலிருந்தே அப்பா வீட்டில் இருக்கிறார் என்று தெரியவில்லையா?"

★

### ஓஹோ!

பையன்:—ஸார்! கிருஷ்ணன் நான் எழுதுவதைப் பார்த்துக் காப்பி யடிக்கிறான்!

உபாத்தியாயர்:—சரிதான்; அப்படியானால் அவனுக்கும் ஸைபர் போடவேண்டியதுதான்!

★

### உங்கள் காரியம்!

காலேஜ் புரொபஸர் (தம்முடைய பிரசங்கத்தின் மத்தியில்):— அடே, கிட்டு! ராமு தூங்குகிறான், பாரு! அவனை எழுப்பு!

கிட்டு:—நீங்களே எழுப்புங்கள், ஸார்! நீங்கள்தானே அவனைத் தூங்க வைத்தீர்கள்?

### நல்ல வேஷம்!

ஸினிமா டைரக்டர் (புதிய நடிகரிடம்):— நீர் ஸினிமாவில் நடித்திருக்கிறீரா?

புதியவர்:— சத்தியவான் சாவித்திரியில் நடித்திருக்கிறேன்.......

ஸினிமா டைரக்டர்:—அதில் உமக்கு என்ன வேஷம்?

புதியவர்:—பின் சத்தியவான். அதாவது சத்தியவானுடைய உயிரை எமன் கொண்டு போகிறான் பாருங்கள். திரும்பி அவனுக்கு உயிர் வரும் வரையில் நான்தான் மேடையில் விழுந்து கிடப்பேன்!

★

### எப்படித் தெரியும்?

பிள்ளை:—அம்மா, அடுத்தவீட்டு அம்பி குதிரையே பார்த்ததில்லை போலிருக்கிறது!

அம்மா:—உனக்கு எப்படியடா கண்ணே, தெரியும்?

பிள்ளை:—நான் குதிரையின் படம் ஒன்று போட்டு அவனிடம் காட்டினேன். அவனுக்கு அது என்னவென்றே தெரியவில்லை!

துணிமணிகள் கெடாமல் எப்படி சலவை செய்வது என்பது ஓர் பெரிய பிரச்னை. இப்பிரச்னையை சுலபமாக்க, உங்களுக்கு தேவையானது கீழ்க்கண்ட இந்த நான்கு சாதனங்கள் :—



**ஸ்வான் சிப்ஸ்:**
பருத்தியாலான ஆடைகளுக்கு




**777 சோப்புக்கட்டிகள்:**
பருத்தியாலான ஆடைகளுக்கு




**ஸெபோடெக்ஸ்:**
பொதுவாக வீட்டுக்காரர்களுக்கும் தொழிற்சாலை, காரியாலயங்களுக்கும்



**ஸைப்ரைன் கேக்ஸ்:**
ஸில்க், ரேயான் போன்ற மெல்லிய உயர்ந்த ஆடைகளுக்கு



**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.**

SHILPI SOM 41 TAMIL.




# பழிக்குப்பழி

எஸ்னென்

ஒரு ஊரில் ஒரு அரசன் இருந்தான். அவனுடைய அரண்மனையில் பல கவிஞர்களும், பாடகர்களும், இன்னும் பற்பல கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களும் இருந்தனர். அவர்களில் கஜமுகன் என்ற ஒரு சித்திரக்காரனும் இருந்தான். அவன் மிகவும் கர்வம் கொண்டவன். தன்னைப்போல் அழகாகச் சித்திரம் வரையக் கூடியவர் வேறு யாருமே இருக்க முடியாது என்பது அவன் எண்ணம். தன்னுடைய சித்திரங்களின் உயர்வைப் பற்றித் தானே அடிக்கடி பெருமை பேசிக் கொள்வான்!

ஒரு நாள் அந்த அரச சபைக்கு வெளியூரிலிருந்து ஒரு சைத்ரிகன் வந்தான். அவன் வரும்பொழுது தன்னுடன் சில சித்திரங்களைக் கொண்டு வந்து, அரசனிடம் காண்பித்தான். அவன் காண்பித்த சித்திரங்கள் உண்மையிலேயே மிகவும் உயர்தரமாயிருந்தன. முக்கியமாக அவன் வரைந்திருந்த சில இயற்கைக் காட்சிகளைப் பார்த்தவுடன் அரசன் உண்மையில் பிரமித்து விட்டான். அவ்வளவு தத்ரூபமாக இருந்தன அந்தச் சித்திரங்கள்!

அந்த சைத்ரிகனைப் பார்த்து அரசன் "நீ உண்மையில் ஒரு உயர்ந்த சித்திரக்காரன்தான்! உன் படங்கள் அற்புதம்!" என்று வியந்து கொண்டாடியதைக் கண்ட கஜமுகனுக்குப் பொருமையும் ஆத்திரமும் உண்டாயின. அரசனைப் பார்த்து, "ஊஹூம்...... இவைகள் என்ன பிரமாதம்! நான் கூட இவைகளைப்போல் எவ்வளவோ வரைந்திருக்கிறேன்! இதைவிட அழகாகக் கூட வரைவேன்!" என்றான்.

அரசன் சிரித்துக்கொண்டே "கஜமுகா, பதட்டப் படாதே! எங்கே உங்கள் இருவர் சாமர்த்தியத்தையும் பார்த்து விடலாம்! என்னைப் போன்ற உருவத்தை நீங்களிருவரும் தனித் தனியே வரைந்து கொண்டு வாருங்கள். மூன்று நாள் அவகாசம் கொடுக்கிறேன். நான்காவது நாள் உங்கள் படங்களை எடுத்துக்கொண்டு வாருங்கள். யாருடைய சித்திரம் மிக நன்றாயிருக்கிறதோ, அவருக்குப் பரிசு வழங்குகிறேன்!" என்றான்.



"அப்படியே ஆகட்டும், மகாராஜா!" என்று இருவரும் ஒப்புக்கொண்டனர்.

அன்றைய தினத்திலிருந்து இருவரும் தனித் தனியாகத் தங்கள் அறைகளில் உட்கார்ந்து கொண்டு, அரசனைப்போல் சித்திரம் வரையத் தொடங்கினர்.

மூன்றாவது நாள் இரவு கஜமுகனுக்குத் தூக்கம் வரவில்லை. புதிய சித்திரக்காரன் ஒருவேளை தன் சித்திரத்தை விட அழகாக வரைந்திருந்தால், அரசன் அப்புறம் தன்னை மதிக்கமாட்டானே என்று வேதனைப்பட்டான்.

கடைசியில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. படுக்கையிலிருந்து எழுந்து, சந்தடி செய்யாமல் நடந்து, சற்றுத் தூரத்திலிருந்த அந்தப் புதிய சித்திரக்காரன் தங்கியிருந்த அறைக்குச் சென்றான். அவன் அப்பொழுது தூங்கிக் கொண்டிருந்தான். மெதுவாக உள்ளே நுழைந்து எதிரே, திரையிட்டு மூடி வைக்கப்பட்டிருந்த சித்திரத்தின் அருகில் சென்றான். ஆகா! அவன் வரைந்திருந்த சித்திரம் அரசனைப் போலவே தத்ரூபமாகவும் அழகாகவும் இருந்தது! அதைப் பார்த்தவுடனேயே கஜமுகனுக்குத் தெரிந்துவிட்டது, அரசன் அந்தப் படத்தைத் தான் பாராட்டுவான் என்பது!




உடனே அருகில் வைக்கப்பட்டிருந்த வர்ணங்களில் ஒன்றை எடுத்து சித்திரத்திலிருந்த அரசனின் முகத்தில் தாறுமாறாகப் பல இடங்களில் பூசி விட்டான்! அரசனின் முகம் பிசாசுபோல் ஆகிவிட்டது! 'சரி, இனி, அரசன் இந்தப் படத்தை லட்சியம் செய்ய மாட்டான்! நமக்குத்தான் பரிசும், புகழும் கிடைக்கும்!' என்று எண்ணிச் சந்தடி செய்யாமல் தன் அறைக்கு வந்து படுத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் அயர்ந்து தூங்கிவிட்டான்!

ஆனால், கஜமுகனுக்கு உண்மை தெரியாது. அந்தப் புதிய சித்திரக்காரன் விழித்துக் கொண்டு கஜமுகன் செய்த காரியத்தை ரகசியமாகக் கவனித்தான்! தனக்கு வந்த ஆத்திரத்தையும் கோபத்தையும் அடக்கிக் கொண்டு, ஒன்றும் அறியாதவன்போல் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தான். தன்னை வஞ்சகத்தால் கெடுக்க எண்ணிய கஜமுகனை வஞ்சகமாகவே பழிக்குப் பழி வாங்கவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான்.

சிறிது நேரங் கழித்து, படுக்கையிலிருந்து எழுந்து கஜமுகன் இருந்த அறைக்குச் சென்றான். கஜமுகன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். தான் வரைந்திருந்த படத்தை அதன் திரையுடன் எடுத்துக் கொண்டு வந்து சந்தடி செய்யாமல் கஜமுகன் அறையில் வைத்து விட்டு, கஜமுகன் வரைந்திருந்த சித்திரத்தை எடுத்துக் கொண்டு வந்து விட்டான்!

மறுநாள் கஜமுகன் சந்தோஷத்துடன், தன் அறையிலிருந்த சித்திரத்தை எடுத்துக்கொண்டு சபைக்கு வந்தான். அதே சமயத்தில் புதிய சித்திரக்காரனும் கையில் படத்துடன் வந்தான்.

முதலில் கஜமுகன் அரசனிடம் படத்தைக் காண்பித்தான். அதைப் பார்த்த அரசன் "சீ! என்ன இது?...என்னைக் கேலியா செய்கிறாய்? ... மடையா!" என்று கஜமுகனைக் கோபித்துக் கொண்டான்.

புதிய சித்திரக்காரன் தான் கொண்டு வந்த சித்திரத்தைக் காண்பிக்கவே, அரசன் மகிழ்ச்சியுடன் அதை ஆமோதித்தான்.

திருடனுக்குத் தேள் கொட்டியது போல், கஜமுகன், ஒன்றும் சொல்லிக் கொள்ள முடியாமல் அவமானமடைந்து மௌனமாக நின்றான்!

# அருமையான திட்டம்

ரஜனி

கொழும்பு, ஜூன்மீ 5உ

இலங்கை இந்தியர் காங்கிரஸ் ஓர் அருமையான திட்டத்தைத் தயாரித்திருக்கிறது. அந்தத் திட்டத்தின் சாரம் இதுதான்:— "சாதாரணமாக ஒரு தோட்டத்தில் ஐந்நூறு தொழிலாளர் இருந்தால் அவர்கள் ஒவ்வொருவரும் மாதத்தில் மூன்று நாள் சம்பளத்தை ஒரு சேமிப்பு நிதியில் போட வேண்டும். மாதம் ஒரு தொழிலாளி ஐந்து ரூபாய் வீதம் சேமித்தால் ஐந்நூறு தொழிலாளரும் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் சேமிக்கலாம். பத்துப் பன்னிரண்டு மாதங்களுக்குள் இந்தத் தொகை இருபத்தையாயிரம் ரூபாய்க்கு மேலாகிவிடும். அதைக் கொண்டு லாபகரமாக வேலை செய்யவில்லையென்ற காரணத்தினால் இன்று மூடப்பட்டு வரும் தோட்டங்களிலொன்றை வாங்கிக் கூட்டுறவு முறையிலே அதில் வேலை செய்ய வேண்டும். லாபத்தையும் தொழிலாளர் அவர்களுடைய முதலீட்டின் விகிதாசாரப்படி பகிர்ந்து கொள்ளவேண்டும்."

அந்தத் திட்டம் அமுலுக்கு வருமாயின், தோட்டத்துக்கு அவர்கள் எஜமானர்களாகி விடுவதோடு, எந்த நிமிஷம் 'டிஸ்மிஸ்' உத்தரவு வருமோ என்று பயந்துகொண்டே வாழவேண்டிய அவசியமும் இராது. மேற்படி திட்டத்தை நடத்தி வைப்பதில் ஸ்ரீ பெரிய கருப்பனைத் தலைவராகக்கொண்ட அட்டபாகைத் தோட்டத் தொழிலாளர் காங்கிரஸ் கமிட்டி ஏற்கனவே தீவிரமாக இறங்கிவிட்டது. அந்தத் தோட்டத்துக்குக் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் சமீபத்தில் விஜயம் செய்தபொழுது தொழிலாளர் முதல் தவணையாகச் சேமித்த ஐந்நூற்று இருபது ரூபாயைக் காங்கிரஸ் தலைவரிடம் கொடுத்து பத்திரப்படுத்தி வைக்கச் சொன்னார்கள். தொழிலாளரின் சேமிப்புப் பணங்களை பத்திரப் படுத்தி வைக்கும் பொறுப்பு ஸ்ரீ தொண்டமானிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

## தாமதம் வேண்டாம்

இங்குள்ள இந்தியர்கள் இந்தியாவிலுள்ள குடும்பங்களின் ஜீவனத்துக்குப் பணம் அனுப்பவேண்டுமென்றால் இந்தியாவிலுள்ள ஜில்லா கலெக்டர்களோ அல்லது மாஜிஸ்ட்ரேட்டுகளோ சர்டிபிகேட்டு கொடுக்க வேண்டியிருக்கிறது. சர்டிபிகேட்டுக்கு மனுக் கொடுத்தால் அவர்கள் மாதக் கணக்கில் அவைகளைக் கவனிக்காமலிருந்து விடுவதாகத் தினந்தோறும் புகார்கள் வந்த வண்ணமிருக்கின்றன. பெரிய உத்தியோகஸ்தர்களின் தாமதம் ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்கு அவஸ்தையாக இருக்கிறது. எனவே அந்தப் பெரிய மனிதர்கள் கொஞ்சம் பெரிய மனது வைத்து சர்டிபிகேட் கொடுப்பதில் தாமதம் செய்யாமல் இருக்கும்படி இலங்கை இந்தியர்கள் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

## வெட்கக்கேடு

இந்தியர் ஒருவருக்குச் சொந்தமான சத்மலவின்னு என்ற தேயிலைத் தோட்டத்தில் இப்பொழுது நடைபெறும் வேலை நிறுத்தம் இந்தியர் அனைவரையுமே வெட்கித் தலைகுனியச் செய்திருக்கிறது. இந்தத் தோட்டம் இலங்கை இந்தியர் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினரும் காங்கிரஸ் தலைவர் பதவிக்கு அபேட்சகராக நின்று போட்டியிட்டவருமான ஒரு இந்தியத் தலைவரின் நிர்வாகத்தின் கீழ் இருப்பதுதான் இன்னும் அதிக வருத்தத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. அவருடைய தோட்டத்திலே ஏழைத் தொழிலாளியிடம் முழுநாள் வேலை வாங்கி அரை நாள் சம்பளம் கொடுப்பதாயும் மீறிப் பேசுபவர்களை 'டிஸ்மிஸ்' செய்வதாயும் புகார்கள் கிளம்பியுள்ளன. வேலை நிறுத்தம் ஏற்படாமல் தடுக்க இலங்கை இந்தியர் காங்கிரஸ் தலைவர்களான ஸ்ரீ ராஜலிங்கமும் ஸ்ரீ. கே. ஜி. எஸ். நாயரும் எவ்வளவோ முயற்சி செய்தும் தோட்ட நிர்வாகம் எவ்விதமான சமரச உடன்பாட்டுக்கும் வர மறுத்துவிட்டது. இலங்கை இந்தியர்களின் அரசியல் உரிமைகளுக்குக் கடுமையான சோதனைகள் ஏற்பட்டிருக்கும் இந்தச் சமயத்தில் இதுபோன்ற சம்பவங்கள் நிகழ்வது மிகவும் விசனிக்கத்தக்கது.

## வேலையில்லா இலாகா!

இந்தியர் பிரஜா உரிமைச் சட்டத்தையும் குடியேற்ற வெளியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டுவர அரசாங்கம் ஜரூராக நடவடிக்கை யெடுக்க ஆரம்பித்து விட்டது. ஸ்ரீ வீரசிங்க என்பவருடைய தலைமையில் இந்தியர் பிரஜா உரிமை இலாகாவை இவ்வாரம் உள்நாட்டு மந்திரி ஏற்படுத்தி யிருக்கிறார். சில வாரங்களுக்குள் மற்ற சிப்பந்திகளும் நியமிக்கப்பட்டு இலாகா ஒழுங்காக வேலைசெய்ய ஆரம்பித்து விடுமென்று தெரிகிறது. சட்டம் கோரும் சகல விதமான யோக்யதாம்சங்களையும ருசுப்படுத்தி இலங்கைப் பிரஜையாவதற்கு விரும்பும் இந்தியர்களைப் பதிவுசெய்வதுதான் இந்த இலாகாவின் வேலை. சட்டத்தைப் பகிஷ்கரிப்பதென்று காங்கிரஸ் தீர்மானித்திருப்பதால் புதிய இலாகா உத்தியோகஸ்தர்களுக்கு தினசரி காரியாலயத்துக்கு வந்துவிட்டுப் போவதைத் தவிர வேறு வேலை யிருப்பதற்கில்லை! ஒரு சில இந்தியரை வேண்டுமானால் பிரஜைகளாகப் பதிவு செய்துகொண்டு சட்டம் சரிவர வேலை செய்வதாக சர்க்கார் சொல்லலாம்.

## இன்னுமா அவமதிப்பு?

கவர்னர் ஜெனரல் ராஜாஜி முன்னொரு சமயம் இலங்கைக்கு வந்தபொழுது, இலங்கைக்கு வரும் இந்தியப் பிரயாணிகள் மண்டபம் காம்பில் கால் நடைகளைப்போல நடத்தப்படுவதைக் குறித்து வருந்தினார். "நம்மை அவமானப்படுத்த நமது பூமியிலே இலங்கைக்கு இடம் கொடுத்திருப்பது கண்டிக்கத்தக்கது" என்றார். மண்டபத்திலிருந்து இலங்கை அரசாங்க வைத்திய முகாமை வெளியேற்றியே தீரவேண்டுமென்றும் அவர் வற்புறுத்தினார். ஆனால் இந்தியா அப்பொழுது சுதந்திர தேசமாயில்லை. இந்தியா சுதந்திரமடைந்த பிறகும் மண்டபம் முகாமை இலங்கை மேலும் ஸ்திரப்படுத்திக்கொள்ள நடவடிக்கை யெடுத்து வருவதுதான் எல்லோருக்கும் ஆச்சரியமா யிருக்கிறது.

குடியேற்றச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு இலங்கைக்கு வராமல் தடுக்கவேண்டியவர்களைத் தடை செய்ய மண்டபத்தில் என்ன மாதிரி ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்பதை இலங்கை அதிகாரிகள் ஆராய்ந்து வருகிறார்கள். இலங்கைக்கு வரும் இந்தியத் தொழிலாளர் சம்பந்தமான புள்ளி விவரங்கள் திருச்சியிலுள்ள ஸிலோன் லேபர் கமிஷன் ஆபீஸில்தானிருக்கின்றன. அவை



"என்ன அம்மா, இந்தப் பையனுக்கு இன்னும் பன்னிரண்டு வயது ஆகவில்லை யென்றால் நம்ப முடியுமா?"

"அது என்னமோ, ஸார்! இந்த கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸிலே ஏறுகிறபோது இவனுக்குப் பதினொரு வயதுதான்! ஏறின பிற்பாடு ஒருவேளை இரண்டு வயது கூட ஆகியிருக்கலாம்!"

களையும் பார்வையிட ஸ்ரீ குணரத்ன திருச்சிக்குச் செல்லவிருக்கிறார். இதையெல்லாம் கவனித்தால் மண்டபத்தை விட்டுக் கிளம்பும் உத்தேசம் இலங்கை அதிகாரிகளுக்கு இருப்பதாகத் தோன்றவில்லை.

## பேராசிரியர் ஸ்ரீநிவாசன்

இலங்கை ரேடியோவின் தமிழ் ஒலிபரப்புகளை ஆராய்ந்து அபிவிருத்தி செய்வதற்கு யோசனைகள் சொல்லுவதற்காக ரேடியோ மந்திரி ஸ்ரீ சிற்றம்பலத்தினுடைய அழைப்புக்கு இணங்கி அடையாறு கலாக்ஷேத்திர டைரக்டர்களில் ஒருவரான பேராசிரியர் ஸ்ரீ ஆர். ஸ்ரீநிவாசன் இலங்கைக்கு விஜயம் செய்திருக்கிறார். இலங்கை ரேடியோவில் கச்சேரி செய்பவர்கள் இப்பொழுது மூன்று ரகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கச்சேரிக்கு தொண்ணூறு ரூபாய், எழுபத்தைந்து ரூபாய் அறுபது ரூபாய் வீதம் சன்மானம் வழங்கப்படுகிறது. ரகம் பிரிப்பதில் பாரபட்சம் காண்பிப்பதாகப் பலமான புகார்கள் இருந்து வருவதாலும் அரசாங்கம் கொடுக்கும் சன்மானத்துக்கு நியாயமான அளவு சேவை பொதுஜனங்களுக்குக் கிடைக்க வேண்டுமென்று மந்திரி வற்புறுத்துவதினாலுமே பேராசிரியர் ஸ்ரீநிவாஸனின் உதவியை இலங்கை அரசாங்கம் கோரியிருக்கிறது.

வருகிறது!

அழகான மன்னனுக்கு
ஆசையில்லை
ஆசைகொள்ளும்-
பெண்களுக்கு....

கணபதி பிக்சர்ஸின்

# மாயாவதி

ஸ்டுடியோ:
மாடர்ன்

T.R.மஹாலிங்கம்
அஞ்சலிதேவி...
சுப்பையா......
சக்காபாணி.....
பெருமாள்......
காளி-ரத்னம்.....
ராஜகாந்தம்.....
மாதவன்.......



டைரக்ஷன்:
T.R.சுந்தரம்
B.A.B.Sc.(LEEDS)

விபரங்களுக்கு: கணபதி பிக்சர்ஸ் எக்ஸ்டென்ஷன் ..... சேலம்....

# என் குடை

ஆசிரியர்: கே. ஏ. அப்பாஸ்] [மொழிபெயர்ப்பு: கே. கணேஷ்

மழை தற்காலிகமாக நின்றிருந்தது. ஆயினும் தெருவிலே ஒரு அங்குல உயரத்துக்குத் தண்ணீர் தேங்கி யிருந்தது. அடிக்கடி பழுது பார்க்கப்பட்ட எனது கால் 'பூட்ஸ்'களின் சந்து வழியாக மழை ஜலம் புகத் தொடங்கியது. வானத்தில் கரு மேகங்கள் சூழ்ந்து சிற்சில சமயங்களில் மின்னல்கள் தோன்றி மறைந்தாலும் மழை மட்டும் பெய்யவில்லை. எனது பகல் சாப்பாடு, பேப்பர்கள், புத்தகங்கள், காய்கறிகள் சில்லறைச் சாமான்கள் ஆகியவற்றைப் பையில் போட்டு, ஒரு கையிலே பிடித்துக் கொண்டு மறு கையிலே குடையைத் தாங்கிக் கொண்டு பஸ்கள் நிற்கும் ஸ்டாண்டை நோக்கி விரைவாகப் போய்க் கொண்டிருந்தேன்.

குடை! நான் குடை என்றழைக்கும் அந்தப் பொருள் ஒரு காலத்தில் அதன் பெயருக்கேற்ப நன்றாகத்தான் இருந்தது. மடங்கிய கறுப்புத் துணியையும் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் கைப்பிடியையும் தூரத்திலிருந்து பார்ப்பவர்கள் இன்றும் குடை என்றே கருதுவார்கள். அது திறக்கப்பட்டுத் துருப்பிடித்த கம்பிகளின் மீது விரிக்கப்பட்டுக் குடை என்ற முழு உருவத்தைப் பெறும்பொழுதுதான் அது ஒரு வடி கட்டும் சல்லடையாகக் காட்சியளிக்கும். அதன் ஓட்டைகள் வழியாக மழைத் தண்ணீர் புகுந்து சொட்டுச் சொட்டாக விழும். விழுந்தாலென்ன? தண்ணீர்தானே? அதுவும் வடிகட்டப் பட்ட பரிசுத்தமான தெளிந்த நீர் தானே? அது நல்ல வடிகட்டியாக உபயோகமாகிறதல்லவா? மேல்மாடி ஜன்னல் வழியாகச் சில அம்மணிகள் வீசுகின்ற காய்கறி, வாழைப் பழம், முட்டை ஆகியவற்றின் தோல்களும், மேலேயிருந்து விழக்கூடிய உதிரிலைகள், குருவி எச்சங்கள் ஆகிய பொருள்களெல்லாம் இக்குடையின் துவாரங்களின் வழியாக ஊடுருவி வரமுடியாது. மழைத் தண்ணீர் நுழைவதைப் பற்றி நாம் அக்கறை கொள்ளத் தேவையில்லை. ஒரு பொருள் எல்லா வகையிலுமா உபயோகப்பட்டு விடுமா? குப்பை செத்தைகளைத் தலைமேல் விழாமல் தடுப்பதற்கென தயாரிக்கப்பட்ட ஒரு குடை - மழைத்துளி விழாது காக்க வேண்டுமென்று என்ன அவசியமிருக்கிறது? சில சமயங்களில் கடலிலிருந்து நீராவி மேலே செல்லும் பொழுது சிறு மீன்களும் மேலே இழுக்கப்பட்டுச் செல்வதால் மழை பெய்யும் பொழுது மீன் மழையாகப் பொழியும் என எங்கோ படித்த ஞாபகம். அங்ஙனம் ஏதாவது நடந்து விட்டால் என் குடை நன்றாகப் பிரயோசனப்படும்! ஏனெனில் அதன் மிகப்பெரிய துவாரத்தின் வழியாகக் கூட மிகச்சிறிய மீனும் நுழைய முடியாது!

நான் இவ்வளவு தூரம் எனது உடைந்த ஓட்டைக் குடையைப் பற்றி பிரஸ்தாபிக்கக் காரணமென்னவாக இருக்குமென நீங்கள் சந்தேகிக்கலாம். காரணம் இக்கதையின் கதாநாயகியே இந்தக் குடைதான். இல்லை, கதாநாயகனென்று நீங்கள் நினைத்துக் கொண்டாலும் சரி; காரணம் மற்றொரு கதாநாயகியும் வருகிறாள். அல்லது ஒரு கதாநாயகனுக்கும் ஒரு கதாநாயகிக்கும் பதிலாகக் கதையில் இரு கதாநாயகிகள் உள்ளனர் என்றும் நீங்கள் கொள்ளலாம்-குடையொன்றும் மற்ற ஒருத்தியும் ஆக இருவர். என்னுடைய நிலையோ இரு பெண்மணிகளுக்கு மத்தியில் அகப்பட்ட கணவானின் சங்கடமான நிலைதான்.

கணவான்என்று என்னைக் கூறிக் கொண்டது என் அகம்பாவத்தால் என்று எண்ணி விடாதீர்கள்; எனது துரதிர்ஷ்டத்தால் என்று நினைத்துக் கொள்ளுங்கள். கணவானாய், கணவானின் மகனாய், கணவானின் பேரனாய் இருப்பதெல்லாம் என் துரதிர்ஷ்டத்தால்தான். இதன் காரணமாகத்தான் நான் ஐந்துமுறை படையெடுத்தும் பி.ஏ. பரீட்சையில் 'பாஸ்' செய்ய முடியவில்லை. நாலு வருஷமாக நான் ஒரு பத்திரிகாலயத்தில் 'புரூப்'கள் திருத்துபவனாக வேலை பார்த்து வந்தும் ஒரு நாளாவது முதலாளியிடம் சம்பளம் கூட்டித் தருமாறு வாய் திறந்து கேட்டதே இல்லை. பிரஸ் மானேஜர், போர்மென், தலைமைப் புரூப் ரீடர், மற்ற சாதாரண புரூப் ரீடர், காப்பி ஹோல்டர்கள் கூட என்னைத் திட்டினால் நான் பதில் பேசுவதேயில்லை. காரணம் என் சுயகௌரவமே யாகும்.

ஹார்ன்பிரோடு வழியாக ஒரு நாள் நான் நடந்து சென்று கொண்டிருந்த பொழுது

ஒரு குடிகார வெள்ளை சோல்ஜர் தமாஷாகவோ என்னவோ என்னை அறைந்து விட்டான். நானும் தமாஷாக அவனை அறைந்து விடலாமென எண்ணினேன். ஆனால் எனது பெரிய மனுஷத் தன்மை அப்படியெல்லாம் செய்து ஒரு காவாலியின் நிலைக்கு என்னைத் தாழ்த்திக் கொள்ளக் கூடாது எனக் கூறித் தடுத்து விட்டது.

எனது போலிக் கௌரவத்தைப் பற்றி இன்னும் அறிய விரும்புகிறீர்களா? எனக்கு முப்பதைந்து வயதாகிறது எனினும் நான் பிரம்மசாரி. மாதா மாதம் கிடைக்கும் நாற்பது ரூபாயில் மனைவியைச் சம்ராட்சிக்க முடியுமா? வேறு மூன்று கல்யாணமாகாதவர்களுடன் நானும் சேர்ந்து ஒரு அறையை வாடகைக்கு அமர்த்தியுள்ளேன். மனைவி யிருந்தாலும் அவளை எங்கே இருக்கச் செய்வது சொல்லுங்கள்? என்னுடைய மூன்று சகாக்களோ சம்பளம் கிடைத்த முதல் நாளே பாரன் ரோடிலுள்ள விபசார விடுதிகளுக்குச் சென்று அடுத்த சம்பள நாளை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். அன்றும் சம்பள நாளாதலால் 'இன்று அவர்கள் நள்ளிரவுக்குப் பின்னரே வருவார்கள்' என எண்ணினேன். எனது ஜேபியில் பர்ஸ் இருந்தது. அதில் எனது மாதச் சம்பளமான புத்தம் புதிய நான்கு பத்து ரூபாய் நோட்டுகளும் சில சில்லறைக் காசுகளும் இருந்தன. இதில் நானும் ஒன்றோ இரண்டோ அல்லது ஐந்து ரூபாயோ சிற்றின்ப விளையாட்டுக்காகச் செலவழிக்க இயலும். எனினும் அவர்களுடன் நான் என்றும் சென்றதே இல்லை. நான் ஒரு கௌரவமான கனவான் என்று முன்னரே கூறவில்லையா? எனது குடையில் பொத்தல்கள் இருக்கலாம். ஆனால் எனது கற்புத்தன்மை பரிசுத்தமானது.



இதற்குள் நீங்கள் பொறுமை யிழந்து "நீயும், உன் மரியாதைகளும், உன் குடையும் நாசமாய்ப் போக! அந்த 'அவள்', அந்தக் கதாநாயகி எங்கே?" என்று நிச்சயமாய்க் கேட்டிருப்பீர்கள். இவ்வளவு நேரம் உங்களை அவளுக்காகக் காத்திருக்க வைத்ததற்கு மன்னிக்கவும். நீங்களோ சில விநாடிகள்தான் காத்திருந்தீர்கள். நானோ மாரிகால மாலை நேரத்தில் ஏறக்குறைய ஒரு மணி நேரம் காத்திருக்க நேர்ந்தது. அப்படிக் காத்திருந்தும் பஸ்ஸோ அன்றி அவளோ வந்து சேரவில்லை. தெரு விளக்கொளி இருளைக் கிழித்துக்கொண்டு பாதைகளில் தளும்பிய நீரில் பிரதிபலிக்கும் வரை காத்திருந்தேன். கியூவில் காத்திருந்த மற்றவர்கள் சலிப்படைந்து டிராம் வண்டி ஒன்றைப் பிடிக்க ஓடினார்கள். நான் மட்டும் எஞ்சி, வருகின்ற பஸ்ஸின் நிழலுக்காக எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது அவளுடைய வருகையை என் மூக்கு அறிவித்தது. அவள் வருகையை என் கண்கள் காணவில்லை. அவளது காலடி ஓசையை எனது காதுகள் கேட்கவில்லை. ஆனால், சென்ட், பவுடர், வியர்வை, மழைத்துளி, இளமை ஆகியவை கலந்த லேசான ஒரு வாசனை எனது மூக்கில் தாக்கியது. அவள் நிற்பதை உணர்ந்தேன். எனது தலையைத் திருப்பிப் பார்க்கும் பொழுது என்னருகிலே ஏறக்குறைய என்னைத் தொடுவதைப் போல் அவள் நின்றுகொண்டிருந்தாள். அவளது தோளின்மேல் ஒரு பச்சைப் பை தொங்கிக் கொண்டிருந்தது. அவ்வளவுதான். குடையோ மழைக்கோட்டோ அவளிடம் இருக்கவில்லை. அந்தச் சமயத்தில் மேலே திறப்புள்ள இரட்டை அடுக்கு பஸ் ஒன்று வந்து சேர்ந்தது. கீழ்த் தட்டு நிறைய ஆட்கள் இருந்தனர். அவள் என் பின்னே

கின்றிருந்தாலும் ஒருக்கால் ஒரே ஆசனம் இருக்கலாமென மதித்து அவள் முதலில் செல்லும்படியாக வழி விட்டேன். மற்றொரு பஸ்ஸிற்காக நான் காத்திருக்கலாமே......நான் ஒரு கனவானல்லவா!

எனது தியாகம் பிரயோசனமற்றதாகி விட்டது. மேல் தட்டு காலியாக இருப்பதால் புதிதாக ஏறிய பிரயாணிகள் அங்கு செல்ல வேண்டுமெனச் சத்தம் போட்டான் பஸ் கண்டக்டர். மேடையிலும் படிக்கட்டின் அடியிலும் ஜனங்கள் நெருக்கி நின்று கொண்டிருந்ததுதான் காரணம். அவள் இதையொன்றையும் லட்சியம் செய்யாது குதிகாலுயர்ந்த பூட்ஸ்களினால் 'டக் டக்'கென்று நான் பின் தொடர மாடிப்படிமேல் ஏறிச் சென்றாள். கண்டக்டர் கூறியது நிஜந்தான். மேல் தட்டில் வேறு ஒருவரும் இருக்கவில்லை. நானும் அவளும்தான் இருந்தோம். அவள் இடது புறமிருந்த பெஞ்சிலே அமர்ந்தாள். நான் அதற்குப் பின் புறத்தில் வலது பக்கமாக இருந்த ஆசனத்திலே அமர்ந்தேன். நான் சிவாஜி பார்க்கிற்கு டிக்கட் வாங்கினேன்; அவள் மாஹிமிற்கு வாங்கினாள். அவ்வளவு தூரமும் நாங்கள் இருவர் மட்டுமே தனியாகப் பிரயாணம் செய்யவேண்டியிருக்குமென்பதை நினைத்த போது என்னையுமறியாது ஒரு குதூகல உணர்ச்சி தோன்றியது. அதற்குப் பின்னர் அந்தக் கண்டக்டர் கீழே போனானோ அல்லது பின்னுள்ள ஆசனத்தில் அமர்ந்திருந்தானோ, மாயமாய் மறைந்து விட்டானோ தெரியாது. அவனை சிவாஜி பார்க் போய்ச் சேரும் வரை காணவில்லை.

போர்பந்தருக்கு அருகில் பஸ் போய்ச் சேர்ந்ததும் எனது சொட்டைத் தலையின் மத்தியில் ஒரு ஒற்றை மழைத் துளி விழுந்தது. மேலே பார்த்தேன்; மின்னுகின்ற மின்சாரக் கம்பிகளுக்கு மேல் ஆகாயம் கன்னங்கரேலென்று காட்சியளித்தது. அத்துளி ஒன்று மட்டுமே விழுந்தது. அதற்குப் பின் காணோம். சிவாஜி பார்க் போய்ச் சேரும் வரை நாங்கள் நனைய வேண்டியிருக்காது என நினைத்தேன்.

'கெப்பிட்டல் சினிமா'வின் அருகில் லைட் கம்பத்தினடியில் பஸ் நின்ற பொழுது அவளது முகத்தை முதன் முறையாகப் பார்த்தேன். அவள், சிவந்த கன்னங்களும், ரத்தம் போல் சிவந்த அதரங்களும், தங்கம் போன்ற தலை முடியும் பெற்ற சிவந்த நிறத்தினளாக இருந்தாள். 'இந்த ஐரோப்பியப் பெண்கள்தான் எவ்வளவு அழகாக இருக்கின்றனர்!' என நினைத்து வியந்தேன். அவ் வெளிச்சம் என் முகத்திலும் விழுந்திருக்க வேண்டும். ஏனெனில் அவள் என் பக்கம் திரும்பி 'சீ! இந்த இந்தியர்களின் லட்சணத்தைப் பார், ஆபாசம்' என்று எண்ணியது போல் என்னைப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அந்த நேரத்தில் தான் எனது பழைய பூட்ஸ்கள், கிழிசல் தைக்கப்பட்ட கோட்டு, கிழிந்த கமிசு, உருவமற்ற கால் சட்டை, க்ஷவரம் செய்யப்படாத முகம், வழுக்கைத் தலை, எல்லாவற்றிற்கும் மேலாக எனது கறுத்த முகம், அனைத்தும் என் நெஞ்சை உறுத்தி வாட்டியது. அதனால் அவளை மீண்டும் திரும்பிப் பார்க்கத் துணியவில்லை. விரைவில் இவ் வெண்ணங்கள் எனது மனதிலிருந்து மறைந்து கொண்டிருந்தன. அந்நேரத்தில் என் தலையிலே இரண்டு முரட்டுத் துளிகள் விழுந்தன. இந்த வழுக்கல் பிரதேசத்தில் அவற்றிற்குப் பிரியம் தோன்றியதோ, என்னவோ! அவை தங்கள் அன்



ணன், தம்பி, தங்கை, மைத்துனன்மார்களையெல்லாம் அழைத்து வந்து குதித்துக் கூத்தாடத் தொடங்கின. ஸீசபோட் மார்க்கெட்டிற்குப் போய்ச் சேரும் தருணத்தில் நல்ல மழையே பெய்யத் தொடங்கியது.

என்னைவிட, அவள் நனைவது எனக்குச் சங்கடமாக இருந்தது. அவள் என்னை வெறுப்புடன் நோக்கி யிருந்தாலும் அவள் ஒரு பெண்; அதுவும் அழகிய பெண்ணல்லவா! நான் மீண்டும் அவளைப் பார்த்த பொழுது அவள் என்னை நோக்கிப் பார்ப்பதைக் கண்டேன். இம் முறை அவள் கண்களிலே வெறுப்புணர்ச்சி இருக்க வில்லை. நான் கற்பனை செய்கிறேனா அல்லது அவள் உண்மையாகவே சிரிக்கத்தான் செய்தாளா?

“உங்கள் குடையைத் திறப்பதற்கென்ன?” என்று இனிய தெளிந்த குரலிலே யோசனை கூறினாள். அவள் குடை யென்று கருதிய பொருள் உண்மையில் ஒரு வடிகட்டிதான் என்று அவளிடம் எப்படிக் கூறுவது......?

“குடை? ஆமாம்; குடைதான்!” என்று கூறிச் சங்கடத்துடன் உடைந்த துருப் பிடித்த சட்டத்தை விரித்தேன். வாழ்க்கையின் விசித்திரங்களை ஆராய்ந்து கொண்டிருந்ததால் தம் கையிலுள்ள குடையை மறந்த, ஞாபக மறதியுள்ள தத்துவப் பேராசிரியர் தோரணையில், “ஞாபகப் படுத்திய தற்காக மிக்க வந்தனம்” என்றேன்.

மழை பெய்துகொண்டிருந்தது. அவள் தெப்பமாக நனைந்து கொண்டிருக்க நானோ கொஞ்சங்கூட வெட்கமின்றி அந்தக் குடையோ அல்லது வடிகட்டியோ—நீங்கள் எப்படி அழைத்தாலும் சரி — அப்பொருளின் கீழே அமர்ந்திருந்தேன். ‘ஒன்றுமில்லாததற்கு இது ஒரு வகையில் பாது காப்புத்தானே, ‘ஏன் நீங்களும் இந்தக் குடையின் கீழே வந்து அமர்ந்து கொள்ளுங்களேன்’ என்ற வார்த்தைகள் பல முறை எனது நாக்கு நுனிவரையில் தோன்றி அப்படியே உறைந்து விடும். அல்லது மழையினால் அடித்துக் கொண்டு போய் விட்டன போலும். எனது வெட்கம், அழகிலே சொக்கிப் போனது. அல்லது ஏதாகிலும் பதில் சொல்லிவிடுவாளோ என்ற பயம் ஆகியவைகளில் ஏதோ ஒன்று என்னைப் பேச விடாமல் செய்து வந்தது. என்ன இருந்தாலும் அவள் ஒரு துரைசானி...... நானோ வேற்றுப் பெண்களை எதிட்டுப் பார்க்காத கௌரவஸ்தன். அவள் அங்கிருப்பதையும், அவள் நிலைமையையும் உணராதவன் போல் மழைத் திரை ஊடே லேசாகத் தென்பட்ட மகமதலி ரோடிலுள்ள உயர்ந்த புதுக் கட்டிடங்களையே கவனித்துக் கொண்டிருந்தேன்.

அப்பொழுது அவள் என்னருகே வந்து உட்கார்ந்திருந்த வாசனை என் மூக்குக்குப் பட்டது. மெல்லிய உடல் எனது இடது தொடை மேல் லேசாக உராய்ந்தானது அவளிருப்பதை மேலும் வலியுறுத்தியது.

“வாருங்கள், வாருங்கள்! நன்றாக அமர்ந்து கொள்ளுங்கள்” என்றேன். பக்கத்தில் சாய முயன்று கொண்டே குடையில் நல்ல பகுதியை அவள் பக்கம் நீட்டி என் பக்கம் பொத்தல் பகுதியைப் பிடித்துக் கொண்டேன். அதனால் அவள்மீது மழைத் துளி விழவில்லை.

“உங்களுக்கு நான் என்ன சொல்லி வந்தனம் செலுத்துவது?” என்று உண்மையிலேயே நன்றியறிதலுடன் கூறினாள். “நீங்கள் உதவியிராவிட்டால் என் எலும்பு கூடத் தெப்பமாக நனைந்திருக்கும்” என்றாள் தொடர்ந்து.

பேச்சு இப்பொழுது ஆரம்பமாகிவிட்டதால் நாணத்தை விடுத்து மிகவும் சகஜமாகப் பேசத் தொடங்கிவிட்டோம்.

“நீங்கள் எங்கு வேலை செய்கிறீர்கள்?”

“நான் பத்திரிகை ஆபீஸில் வேலை செய்கிறேன்” என்றேன்.

ஆசிரியரா அல்லது புரூப் ரீடரா என்பதை விரித்துக் கூறாமல் பொதுவாகக் கூறி வைத்தேன். “நீங்களும் வேலை செய்கிறீர்களா?” என்று நான் கேட்டான்.

அதற்கு அவள் “ஆமாம்; நானும் ஏதோ செய்கிறேன், அதையும் ஒரு வேலை என்று கூடச் சொல்லலாம்” என்றாள் ஒரு மாதிரி அலுத்துக் கொண்டு.

நான் பின்கண்டவாறு யோசிக்கலானேன். ‘இவள் சுருக்கெழுத்து எழுதுபவளாக இருக்க வேண்டும். அல்லது நாள் முழுதும் ஒரு டைப்படிக்கும் மிஷின் முன் அமர்ந்து டைப் அடித்து விட்டுச் செல்லும் காரியாலயக் காரியதரிசியாக இருக்க வேண்டும். இந்த ஐரோப்பியப் பெண்களைப் பற்றி நம்மவர்கள் வீண் அவதூறுதானே கூறுகிறார்கள்? இவள் எவ்வளவு அன்புடன் என்னுடன் பழகுகிறாள்?’

அந்தச் சமயத்தில் மழை பலக்க ஆரம்பித்துவிட்டது. “உங்கள் உடை வீணாகப் போய்விடுமே. பஸ் கம்பெனி கொடுத்துள்ள கான்வஸ் துணியால் உங்கள் முழங் கால்களை

மூடிக் கொள்ளுங்களேன்?" என்றேன் நான். ஒரே மறைப்பின் கீழ் இருவர் கால்கள் புகுந்து கொண்டால் உராய்தல் சிறிது இருக்கத்தானே செய்யும். அவளது பட்டுப் போன்ற மெல்லிய தொடைகள் என்மேல் படவும் எனது உடலிலே மின்சாரத் தாக்குதல் ஏற்பட்டதுபோல் இருந்தது.

அப்பொழுது கடலிலிருந்து ஒரு பெருங் காற்று வந்து கொண்டிருந்தது. அந்தக் குடை எந்த வினாடியிலும் 'பாரசூட்'டாக மாறி என்னையும் சேர்த்துத் தூக்கிக் கொண்டு பறந்து விடும் ஆபத்தான நிலைமையிலிருந்தது. எனது வலது கையால் உடைந்த கைப் பிடியை இறுகப் பிடித்துக் கொண்டு இடது கையால் சட்டத்தைத் தாங்கி, காற்று குடையின் உள்ளடித்து இழுக்காமல் பாதுகாக்கையில் எனது வலது கையின் அருகிலே மெல்லிய கை யொன்று தொட்டது. குடையைச் சரி செய்ய அவளும் உதவினாள். அவளது இடது கை எனது கையுடன் குடையின் பிடியைச் சேர்த்துப் பிடித்தது. வலது கையோ சட்டத்தைத் தாங்குவதற்காக என் தோளைத் தழுவும் முறையில் வளைந்திருந்தது. ஆஹா! அதுதான் என் வாழ்க்கையிலேயே இன்பகரமான க்ஷணமாகும்.

நான் ஒரு கனவான் என்பதும் உண்மை தான். எனினும் காதல் உணர்ச்சி இல்லாத மரக் கட்டையல்லவே நான்? அந்தச் சந்தர்ப்பம் வருணிக்க முடியாத அளவு இன்பகரமானது என்று என் மனதில் பட்டது. ஒரு ஆடவனும் பெண்ணும்—அதுவும் ஒரு அழகிய பெண்—இருவரும் ஒரே குடையின் கீழ் உடல் நெருக்கத்துடன் உட்கார்ந்திருந்ததை வர்ணிக்க முடியுமா?

தினசரிப் பத்திரிகையில் 'புரூப்ரீடரா'க இருந்ததால் எனக்கு அரசியலிலும் அக்கறையுண்டு. சுதந்திரம், சர்வதேசியம், அட்லாண்டிக் சாஸனம், சான்பிரான்ஸிஸ்கோ, அணுகுண்டு இவ் வார்த்தைகளை நன்கு அறிவேன். ஆயிரக்கணக்கான அரசியல் கட்டுரைகள் அறிக்கைகளினது புரூப்களைப் பார்த்திருக்கிறேன். பயிற்சி பெற்ற விசேஷ நிருபர்களைப் போல எல்லா விநோதங்களிலும் அரசியல் முக்கியத்துவம் ஏதாவது தொன்று தோன்றுவதைக் காணமுடியும். உதாரணமாக வானம் மேகங்களினால் சூழ்ந்திருந்தால் சிம்லா முக்கூட்டு மகாநாடு தோல்வியடையக் கூடும் என அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றன என்றும் ஆனால் சிம்லாக் குன்றுகளின் உச்சியில் சூரியன் நன்கு பிரகாசித்தாலோ அரசியல் அரங்கத்திலே வெற்றியின் சின்னங்கள் தோன்றும்... என்றும் நிருபர்கள் எழுதுவது போல இவ் வழகிய அணங்கினை நான் சந்தித்தது ஏதாவது அரசியல் முக்கியத்வம் உள்ளதாக இருக்குமோ என எண்ணினேன். உடனே என் உள்ளத்தே மின்னலைப் போன்ற எண்ணம் தோன்றி மெல்லிய குரலில் முணு முணுத்தது. "எல்லாம் நன்றாக விளங்கி விட்டது. பூட்ஸ்களிலும் தலைவிதியிலும் துவாரங்கள் நிறைந்த நீதான் ஏழை இந்தியா. இவ்வலங்காரியோ இந்தியர்களின் இதயத்தை ஆட்சி செய்யும் பிரிட்டானிய ராணி. இம் மழையும் காற்றும் பாசிஸ யுத்தப் புயல்கள். இக் கொடிய புயலினின்று காப்பாற்றும் இந்த உடைந்த குடைதான் இந்தியாவையும் பிரிட்டனையும் காப்பாற்றுகின்ற எளிய தனம்......" என்று ஏதேதோ சிந்தித்துக் கொண்டு வந்தேன்.

நாங்கள் அப்பொழுது பேண்டி பஜார் வழியாகச் சென்று கொண்டிருந்தோம். வீதியின் குறுக்கே நீண்ட கொடியில் 'பாகிஸ்தான் இன்றேல் சாவு' என்று பொறிக்கப்பட்டிருந்தது. மழையினால் மை பரந்து வார்த்தைகளை அழித்திருந்தது. பாகிஸ்தானிற்கு ஒரு தாடி போட்டிருந்தது. 'சாவு' என்ற வார்த்தை மிகவும் பயங்கரமாகத் தோன்றியது. நான் எனக்குள்ளாகவே 'எனக்குச் சாவு என்றால் பயம், ஆகையால் அதற்குப் பதில் பாகிஸ்தான் கொடுங்கள்' என்று கூறிக் கொண்டேன். எனது செய்திப் பத்திரிகை உள்ளம் 'நீ



"ஏண்டாப்பா சாமா! நீ என்ன பிரம்மச்சாரிக் கட்டையா யிருந்துண்டு இப்படி ஜோரா வெற்றிலை பாக்குப் போட்டுக்க ஆரம்பிச்சுட்டாயே!"

"ஏன், மாமா! பிரம்மச்சாரிகள் கலியாணமே பண்ணிக் கொள்கிறார்களே! வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளக் கூடாதா?"

ஹிந்துஸ்தான், இந்தப் பெண்தான் பாகிஸ்தான். இக் குடைதான் இருவரையும் காக்கும் இமாலயம்......’என்றது.

புயல் ஓய்ந்ததையும் அவள் தனது முகத்தை எனது தோளில் சாய்த்து மெல்லிய பூனைபோல் தூக்கம் போடுவதையும் உணர்ந்தேன். இவ்வின்ப உணர்ச்சியில் அரசியல் கற்பனைகளெல்லாம் மறைந்தன. அரசியல் அர்த்தங்கள் கண்டு கொண்டிருந்ததற்காக என் மனத்தை நானே திட்டிக் கொண்டேன். நாங்கள் இருவரும் இந்திய இலங்கையின் சின்னங்களோ, அன்றி ஹிந்துஸ்தான் பாகிஸ்தான் சின்னங்களோ அல்ல. சிரஞ்சீவிக் காதலின் சின்னங்களேயாம். நாங்களிருவரும் ரோமியோவும் ஜூலியட்டும் போல், லைலாவும் மஜ்னுவும் போல், ஷிரினும் பர்ஹாதும் போல்......

பைக்கல்லா, லால்பாம், பரேல், தாதர் ஆகிய இடங்களின் வழியாக பஸ் ஓடிக் கொண்டிருக்கையில் மேற்கண்ட இன்ப உணர்ச்சி ஏற்பட்டது. மழையும் நின்றிருந்ததால் அவளை அசைக்காது குடையை மூடினேன். ‘கிரீச்’ சென்று டயர் போட்டுக் கொண்டு திலகர் பாலத்தில் ஏறும்பொழுது அவள் கண்களை மெதுவாகத் திறந்து, சோர்வுடன் கொட்டாவி விட்டுக்கொண்டே “இவ்வளவிற்கும் என் நன்றி......” என்றாள். ‘இவ்வளவிற்கும்’ என்பதை அழுத்திக் கூறினாள். ‘என் வாழ்க்கையிலேயே கிடைக்காத இன்பப் பொழுதிற்காக நானல்லவா நன்றி செலுத்த வேண்டும்?’ என்று பதில் கூறலாமா என எண்ணினேன். அது அதிகப் பிரசங்கித்தனமாக இருக்குமென நினைத்து, “அதைப் பற்றிப் பரவாயில்லை. நீங்கள் ஒன்றும் நன்றி செலுத்தவேண்டாம்” என்று கூறினேன். சிவாஜி பார்க்கின் முனையில் பஸ் வந்து கொண்டிருந்தது. அடுத்தாற்போல நிற்கும் இடத்தில் நான் இறங்க வேண்டியதை எண்ணியதும் என் மனம் சோர்வடைந்தது. எனக்கென்னவோ அவளது பெயர், விலாசம், அடுத்த முறை எங்கு சந்திக்கலாம் என்றெல்லாம் கேட்டுத் தெரிந்துகொள்ள ஆசைதான். ஆனால் முப்பத்தைந்து ஆண்டுகளாகக் கனவானாக வளர்க்கப்பட்ட எனக்கு அவையெல்லாம் கேட்க வாயே வரவில்லை.

“ஹரி நிவாஸ்!” என்று கீழே இருந்து பஸ் கண்டக்டர் கத்தினான். பஸ்ஸும் நின்றது.

அவளது அழகிய முகத்தைக் கடைசியாக நோக்கி “வந்தனம்” என்று கூறி விட்டுக் கீழே இறங்கினேன்.

ஏனோ எனக்கு அப்பொழுதே வீட்டுக்குப் போகத் தோன்றவில்லை. தெரு முனையிலே அந்த நேரத்திலும் திறந்திருந்த ஈரானி ஹோட்டல் என் கண்ணிற்பட்டது. மழையில் நனைந்ததற்குப் பின் ஒரு கப் தேநீர் அருந்தினால் நன்றாக இருக்குமென எண்ணினேன். அத்துடன் இன்னொரு நாளைக்குக் கிடைக்க முடியாத அந்த இன்பகரமான நேரத்தைப் பற்றிச் சிறிது நேரம் சிந்தித்துக் கொண்டு இருக்கலாம் என்று எண்ணினேன்.

தேநீரும் லேசான சூடாக இருந்ததால் ஒரே நிமிஷத்தில் குடித்து விட்டேன். பிறகு குடையைக் கையில் பிடித்துக் கொண்டு வெளியே செல்லக் கிளம்பினேன்.

“என்ன ஐயா, தேநீருக்குக் காசு எங்கே?” என்று ஹோட்டல் பையன் கத்தினான்.

வெட்கமாகப் போய்விட்டது. எனது ஞாபக மறதியைத் திட்டிக் கொண்டேன். என்னைக் கேவலமாக அல்லவா இந்தப் பையன் நினைப்பான்? எனது உயர்வைக் காண்பிக்க அவனுக்கு ஒரு அணா இனாமாகக் கொடுத்துவிட்டால் போகிறது என நினைத்தேன். அதுவும் இன்று விசேஷ நாளாதலால் சிறிது அதிகமாகக் கொடுத்துவிட்டால் தான் போகிறது......!

என் கோட்டின் உட்புற ஜேபியில் கை சென்றது. ஆனால் அங்கு என் பர்ஸ் இருக்கவில்லை. வேறு எந்த ஜேபியிலும் காணோம்.

‘இவ்வளவிற்கும் என் நன்றி’ என்று ‘இவ்வளவிற்கும்’ என்பதை அழுத்திக்கூறிய இனிய குரல் காதிலே தொனித்தது. அதே குரல் ‘ஆமாம், அதையும் ஒரு வேலை என்று சொல்லலாம்’ என்று கூறியது என் காதில் மறுபடியும் கேட்டது.

அடுத்த மேஜையில் ஒரு வாடகை மோட்டார் ஓட்டி தேநீர் அருந்திக் கொண்டிருந்தான். வெளியே அவனது காரின் என்ஜின் ஓடியபடியே நிறுத்தப்பட்டிருந்தது. நான் நினைத்திருந்தால் அந்த டாக்ஸியில் குதித்து மஹிமிற்குப் பஸ் போய்ச் சேருவதற்கு முன்னர் அந்தப் பெண்ணைக் கைதுசெய்து, என் சொத்து முழுதும் கொண்ட பர்ஸை மீட்டியிருக்கலாம். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை. என்றால் செய்யவும் முடியவில்லை. ஏன்? அவள் ஒரு துரைசானி; நானோ ஒரு கனவான். இத்தகைய வீண் கௌரவந்தானே என்னையும், என், என் தேசத்தையும் நாசமாக்குகிறது என்று முன்னரே நான் உங்களுக்குக் கூறவில்லையா?

# சருமத் தடிப்பு சொஸ்தமாகிறது



"சருமத்தடிப்பு, எக்ஸிமா, முதலிய நோய்களுக்கு நான் சிகிச்சை செய்திருக்கிறேன். ஒவ்வொன்றும் வெல்டர்மாவுக்குப் பணிந்தன."

—N. E. (நர்ஸ்)

## வழவழப்பானது, பிசுக்கற்றது

முதல் தடவையாக சருமத்தின் மேல் வல்டெர்மாவைத் தடவிய வுடனேயே அதிலிருக்கும் இருவித சக்திகளும் — வேலை செய்வதை நீங்களே **உணர்வீர்கள்.** இந்த இருவித சக்திகளில் ஒவ்வொன்றும் பலவித கொடிய கிருமிகளுக்குச் சத்துரு — அநேகவித சரும வியாதிகளுக்கும் மூலகாரணமாகும் கிருமிகளையும் அடியோடு அழித்து விடுகிறது.

எரிச்சல், வேக்காடு அடங்குகிறது. சருமம் மறுபடியும் சுத்தமாகவும், சுகமாகவும், ஆரோக்ய மடைகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள் மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன.

வேறென்ன இருக்கிறது. நீரில் — எண்ணெய்ச் சேர்க்கை என்னும் புதுமையை அடிப்படையாகக் கொண்டு தயார் செய்யப்பட்ட வெல்டர்மா— நோய்கண்ட சருமத்திலுள்ள விஷத்தை வெளியேற்றுவதோடு மீண்டும் நோய் தொத்திவிடாமல் தடுக்கிறது. சரும வைத்திய நிபுணர்களால் பரிசீலனை செய்யப்பட்டது. வல்டெர்மா, கரை உண்டாக்காது. பூசின இடத்தில் புலனாகாது. எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் உபயோகப் படுத்தலாம்.

**ஜியப்ரே மானர்ஸ் அன் கோ., லிமிடெட்**

பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC

**Valderma**

THE Non-Greasy BALM

V. 3

## உங்களுக்கு
## எடை குறைந்து தளர்ச்சி, அதைரியம், பலவீனம்
### வெறுப்பு உணர்ச்சிகள் ஏற்பட்டால்

கீழுள்ள எச்சரிக்கைகளை கவனியுங்கள்!



இல்லையேல் ஏதேனும் விபரீதம் ஏற்படும்!

இன்றே மருந்துகளை உபயோகிக்காமல் உடனடியாகவே உங்கள் ஆரோக்கியத்தையும் சரீரத்தையும் திடப் படுத்துங்கள்.

இயற்கையில் போதிய அளவில் தாதுப் பொருள்களும் விட்டமின்களும் இல்லை என்பதை எச்சரிக்கத்தான் "தாதுவும் விட்டமினும்" குறைந்து விட்டது என்று வைத்தியர்களும் கூறுகிறார்கள். சமைத்த உணவுப் பதார்த்தங்கள் உங்களுக்குப் போதிய தாதுக்களை அளிக்கின்றன என்று கூற முடியாது.

இந்த விஷயத்தில் நீங்கள் வெகுவாய் சிரத்தை எடுத்துக் கொள்ளாவிட்டால்— உங்கள் தேகத்தின் வியூக சக்தி குறைந்து, துன்பமளிக்கும் வியாதிகள் வெகு சுலபமாக உண்டாகும். பிற்பாடு வாரக் கணக்கில் வைத்தியமும் மருந்தும்தான்.

யோசனை செய்யாமல் விகேல்ப் சாப்பிடுங்கள். மனித வளர்ச்சி வியூகத்திற்கு இன்றியமையாத அத்யாவசியமான தாதுக்களில்— கால்ஷியம், பாஸ்பரஸ், கந்தகம், இரும்பு, மக்னீஷியம், அயோடின் ஆகாரம் போன்ற 9 தாதுக்கள் அடங்கி யிருக்கின்றன.

விகேல்ப் ஒரு சாதாரண முறையில், தாதுப் பொருள்கள் அனைத்துக்கும் இருப்பிடமான கடல் மூலிகையிலிருந்து தயாரிக்கப் பட்டது தான்.— தயாரிப்பில் விட்டமின் B 1, D 2 வும் கொஞ்சம், இரும்பும் சேர்க்கப் பட்டிருப் பதைத் தவிர வேறு மருந்து எதுவும் சேர்க்கப் படவில்லை. இன்றே விகேல்ப் உபயோகியுங்கள். எவ்வளவு விறுவிறுப்பாகவும், ஆரோக்யத் துடனும், ஆவலுடனும் வேலை செய்ய முடி கிறது என்பதை உணர்வீர்கள். விகேல்ப் ஒரு டானிக்குடன் ஆகாரமும்கூட.

**VIKELP** டானிக் ஆகாரம்
**விகெல்ப்**

புதிய அமைப்பு கணக்கான மணி காட்டும் உங்கள் ஆயுள் காலம்வரை உழைக்கும் இவை புகழ்பெற்ற கொலம்பியா, சாக் ஸோனியா, ஓரிஸ், டைம்ஸ் கெடி காரங்கள். ஆயுள் முழுவதும் உழைப் பவை. இவை ஜர்மனி, சுவிஸ் தயாரிப்பு. ஒரே தடவையில் இரண்டு கடிகாரங்க ளுக்கு ஆர்டர் அனுப்புவோருக்கு 15 சத விகிதம் விலையில் சலுகை காட்டப்படும்.



மூன்று வருஷ உத்தரவாதம்

| | | |
|---|---|---|
| குரோம் கேஸ் | ... ரூ. | 16 |
| குரோமியம் கேஸ் உயர் ரகம் | ... ரூ. | 20 |
| குரோம் 4 ஜுவெல்கள் | ... ரூ. | 22 |
| குரோம் கேஸ் 5 ஜுவெல்கள் | ... ரூ. | 25 |
| குரோமியம் கேஸ் 7 ஜுவெல்கள் | ... ரூ. | 30 |
| 15 ஜுவெல்கள் கனமான ஷோரஸ் | ... ரூ. | 38 |
| 15 ஜுவெல்கள் வாட்டர் ப்ரூப் | ... ரூ. | 58 |



ஐந்து வருஷ உத்தரவாதம்

| | | |
|---|---|---|
| குரோமியம் கேஸ் 5 ஜுவெல்கள் | ... ரூ. | 30 |
| ,, ,, 7 ஜுவெல்கள் | ... ரூ. | 34 |
| ,, ,, 15 ஜுவெல்கள் | ... ரூ. | 46 |
| ஸ்டீல் கேஸ் 15 ஜுவெல்கள் | ... ரூ. | 60 |
| ரோல்ட்கோல்ட் 4 ஜுவெல்கள் | ... ரூ. | 36 |
| ,, 7 ஜுவெல்கள் | ... ரூ. | 38 |
| ,, 15 ஜுவெல்கள் | ... ரூ. | 50 |
| ரோல்ட்கோல்ட் 20 மைக்ரோன்ஸ் 10 வருஷ உத்தரவாதம் 15 ஜுவெல் ஜெர்மன் தயாரிப்பு உயர்ந்த ரகம் | ... ரூ. | 70 |
| சிறிய வடிவம் ஸ்டீல் கேஸ், 17 ஜுவெல்கள், எல்லாவற்றையும் தாங்கக் கூடியது, வாட்டர் ப்ரூப் செண்டர் செகண்ட், சாக்ஸோனியா | ... ரூ. | 99 |

எழுதுபவர்களுக்கு கேட்லாக்கும் விலை ஜாப்தாவும் இலவசமாக அனுப்பப்படும்

●

**SHARMA WATCH COMPANY**
(IMPORTERS)
(W. DEPO.) TUMSAR — C. P.



## புத்தப் புதிய

# ஐ.ஆர்.பி.ரேடியோ

## மாடல் 476 U/B

மூன்று வேவ் பாண்டுகளும் அடங்கியது - AC/DC ட்ரை பாட்டரி

நீங்கள் எங்கு வசித்தாலும் சரி கவலையில்லை! உலகில் எல்லா பாகங்களுடனும் உங்களுக்குத் தொடர்பு இருந்து கொண்டிருக்கும்.

**பாட்டரி உள்பட விலை ரூ. 360**

•

ஏஜண்டுகள்:

**மெஸர்ஸ். கார் & கோ.**

2. தம்பு செட்டித் தெரு - மதராஸ் - 1

---

## அமெரிக்கன் மாடல் ரிவால்வர்

### லைசென்ஸ் வேண்டியதில்லை




உங்கள் உயிரையும், சொத்தையும், மானத்தையும், திருடர்கள், விலங்குகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

வீட்டிலும், பிரயாணம் செய்கையிலும் இந்த அழகிய உறுதியான ரிவால்வர் உங்களுக்குச் சிறந்த, நம்பகமான நண்பனாக விளங்கும். ஒன்றன்பின் ஒன்றாக தானே 6 தரம் சுடுவதற்கு 6 ரவைகள் பொருந்திய இது, அசல் அமெரிக்கன் பிஸ்டல்களுக்குச் சமமானது. 15 அவுன்ஸ் கனமும், 9 அங்குல நீளமும் உள்ள இது நெருப்பைக் கக்கிக் கொண்டு பயங்கர சப்தத்துடன் வெடிக்கிறது. இன்றே இதில் ஒன்றுக்கு ஆர்டர் கொடுங்கள், குறைந்த விலையுள்ள இந்த மெய்க்காப்பாளன் இன்றி ஒரு நாளும் இருக்காதீர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ரகம் நெ. | 222 | ரூ. | 6/8 |
| ,, | 333 | ரூ. | 7/8 |
| ,, | 444 | ரூ. | 8/8 |

மேல்கொண்டு 4 டஜன் ரவைகள் விலை ரூ. 4/8. பிஸ்டல் உறை கொண்ட தோல் பெல்ட் ஒன்றின் விலை ரூ. 5/- லூப்ரிகேடிங் ஆயில் ஒரு பாட்டில் விலை ரூ. 1/- கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**WILSON TRADING CORPORATION**

P. B. 247. CAWNPORE (U. P.)




# சிறிய நகர பாடசாலை

குழந்தைகள் தங்கள் வருங்கால முன்னேற்றத்திற்கு வேண்டிய முக்கிய நோக்கங்களையும் அபிலாஷைகளையும் சிறு வயதில் அடைவது பள்ளிக்கூடங்களில்தான். ஆகையினால் பாடசாலை கட்டிடங்களும் அதன் சுற்று வட்டாரங்களும், அவர்களின் தேகசுகத்தை விருத்தி செய்வதற்கு அனுகுணமாக இருப்பதுடன், குழந்தைகளின் கல்வி ருசியையும் வளர்க்கக்கூடிய முறையில் அழகாக அமைந்திருக்க வேண்டும்.

அந்த ஆரோக்கியத்தையும் ஆனந்தத்தையும், சிமின்ட் போட்ட கான்கிரீட்டைவிட வேறு எந்தக் கட்டிட நிர்மாணப் பொருளாலும் கொடுக்கமுடியாது. கான்கிரீட் கட்டிடங்கள் நீண்டகால வாழ்வுடையவை. சிக்கனமானவை. நெருப்பினால் அழியாதவை. மேலும் முக்கியமாக, பக்கத்திலும், கீழும், மேலும், வகுப்புகள் நடக்கும் பள்ளிக்கூடங்களில் சத்தத்தைத் தடுக்க மிகவும் உதவுகின்றது.

மற்ற விவரங்களுக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுங்கள் :— தி கான்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா, 9 மவுண்ட் ரோடு, மதராஸ்.



**தி ஸிமென்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்**
**ஏ.ஸி.ஸி. லிமிடெட்டின் விற்பனை மானேஜர்கள்**

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

துணிகள்
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்யப்
பட்டுள்ளன...

...அது
ஸன்லைட் சோப்பினால்
தான்!

SUNLIGHT SOAP

SUNLIGHT SOAP

S. 108-172 TM